# டெபாசிட்தாரர்களுக்கு

## அன்பளிப்பு!

## வெள்ளிக் குத்து விளக்கு

ஒவ்வொரு ரூ. 5000/-ம் டெபாசிட்டுக்கும்

தங்கள் முதலீட்டிற்கு இதோ ஒரு பொன்னான வாய்ப்பு ...

## "சுபிட்சத்திற்கு வழிகாட்டி சுமங்கலி"

பெறுவீர் ரூ. 10,000/- 48 மாதங்களில்

## "சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்"

தங்கள் முதலீடு ரூ.5000/- இரட்டிப்பாகிறது

கவர்ச்சிகரமான மாதாந்திர வட்டி வழங்கும்
விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன

| ஒரு வருடம் | இரண்டு வருடங்கள் | மூன்று வருடங்கள் |
| --- | --- | --- |
| 16% | 17% | 18% |

குறைந்த டெபாசிட் ரூ.1000/- ஏற்றுக் கொள்ளப்படும்



## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(HIRE PURCHASE FINANCIERS)

39, நடேச ஐயர் தெரு (2வது மாடி)
(சிவா விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017.
போன்: 447186

24/1-A, மார்கோசா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம்.
பெங்களூர்-560 003 போன்: 24795

எண்: 2 & 3, முதல் மாடி, சி. எ. கஜன் ரோடு,
தஞ்சாவூர் போன்: 1626

14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601
போன்: 483

9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை, போன்: 453



**C.A. BALOO**
Managing Partner

CHARL

# டென்னிஸ்க்காக

## நாட்டைத் துறந்தவர்!

மார்ட்டினா நவ்ரதிலோவா செக்கோஸ்லோவேகியாவில் பிறந்து, அமெரிக்க வாசியாகப் பதிவு செய்து கொண்டவர். டென்னிஸ் ஆடியே பணம் குவிக்கும் ஒரு கற்பக விருட்சம் அவர். மணிக்கு 90 மைல் வேகக் குண்டு வீச்சுக்கள் போன்ற அவரது சர்வீஸ் பிரசித்தம்! இடதுகை ஆட்டக்காரியான மார்ட்டினா நவ்ரதிலோவா டென்னிஸ் குடும்பத்தில் பிறந்தவள். அவளது பாட்டி அக்னஸ் செமன்க்ஷா செக்கோஸ்லோவேகியாவில் இரண்டாவது ராங்கை வகிப்பவள். இவரது இளைய சகோதரி ஜனா டென்னிஸில் வளரும் நட்சத்திரம்.

செக்கோஸ்லோவேகிய நாட்டு டென்னிஸ் ஆட்ட நிர்வாகிகள் செய்த கெடுபிடிகளே மார்ட்டினாவை அமெரிக்காவில் தஞ்சம் புகும்படி செய்துவிட்டன.

ஐந்தடி எட்டு அங்குலம் உயரமுள்ள மார்ட்டினா நவ்ரதிலோவா 150 பவுண்ட் எடை உள்ளவள். மெர்ஸிடிஸ் பென்ஸ் ஸ்போர்ட்ஸ் கார் ஒன்றே அவளது ஆடம்பரப் பொருள்!

1978, 1979, 1982 மூன்று வருஷங்கள் விம்பிள்டன் பட்டம் சூடியவர் மார்ட்டினா.

## சங்கீதத்தைத் துறந்தவர்!

ஜிம்மி கானர்ஸின் தந்தை குளோரியோ கானர்ஸ் டென்னிஸ் கற்பிக்கும் புரொபஷனல்! ஜிம்மி கானர்ஸின் டென்னிஸ் ஆட்டத்துக்கு வித்திட்டவர்கள் அவரது அன்னையும் பாட்டியுமே!

ஜிம்மி கானர்ஸுக்குத் தனியர் ஆட்டம் ஆடுவதிலேயே விருப்பம் அதிகம். வெற்றி பெற்றால் இன்னொருவரைப் பாராட்டவேண்டியதில்லை. தோல்வியுற்றால் இன்னொருவரைக் குற்றம் சொல்ல வேண்டியதில்லையே!

டென்னிஸ் கற்பதற்காகவே அன்னையுடன் ஜிம்மி கானர்ஸ் லாஸ் ஏஞ்செல்ஸுக்குச் சென்று, பஞ்சோ ஸெக்கூராவிடம் டென்னிஸ் நுட்பங்களைக் கற்றுத் தேர்ந்தார். கலிபோர்னியா சர்வகலாசாலையில் சங்கீதக் கலையில் தேர்ச்சி பெற விரும்பினார். ஆனால் அவரது டென்னிஸ் ஆட்டத்துக்குச் சங்கீதம் இடைஞ்சலாக அமையவே சங்கீதக் கலையினைக் கற்கும் ஆசையினைக் கைவிட்டார்!

ஜிம்மி கானர்ஸ்–கிரைஸ் எவெர்ட் காதல் பிரசித்தமானது! ஆனால் அது கைகூடவில்லை!

ஐந்தடி பத்தங்குல உயரம். எடை 150 பவுண்ட்கள்! தாமே ஒரு டென்னிஸ் கிளப் நிறுவி, இளைஞர்களுக்குக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பது ஜிம்மி கானர்ஸின் அவா!

1974ம் வருஷத்துக்குப் பிறகு எட்டு வருஷ இடைவெளிக்குப் பிறகு ஜிம்மி கானர்ஸ் விம்பிள்டன் பட்டம் பெற்றிருப்பது தனிச் சிறப்பு.

—குண்டுமணி



# எனக்குள் ஒரு போராட்டம்!


✖ அச்சகத்தில்...

**1932ல் 'பாரத தேவி' பத்திரிகையில் ஒரு துணுக்கு எழுதி ஆரம்பித்த திரு சாவியின் எழுத்துப்பணி ஐம்பது ஆண்டுகளாக ஒய்வே இல்லை. கூடிய விரைவில் அவரது எழுத்துப் பணிக்கு விழா எடுக்க இருக்கிறார்கள். பொன் விழா காணும் சாவியிடம் ஒரு பேட்டி :**

**''எழுத்தாளன் என்று ஒருவனைக் குறிப்பிடும்போது அவனுக்கு என்ன அடிப்படைத் தகுதிகள் இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?''**

''நிறையப் படிக்கணும். முக்கியமா ஆங்கிலம் நன்றாகத் தெரிந்திருக்க வேண்டும். பல்வேறுபட்ட புத்தகங்களைப் படிக்க வேண்டும். முக்கால் பங்கு படிக்கணும். கால் பங்கு எழுதணும். ஆரம்ப காலத்தில் எனக்குச் சரியான ஆங்கில அறிவு இல்லாததால் துணுக்கைக்கூட ரசிக்க முடியாமல் அவஸ்தைப் பட்டிருக்கிறேன். மற்றொன்று உழைப்பு. ஈடுபாட்டுடன் கூடிய உழைப்பு ஒரு எழுத்தாளனுக்குக் கட்டாயம் இருக்க வேண்டும். என் அனுபவத்தில் சொல்லுவேன், தொடர்ந்து எழுதிக் கொண்டே இருப்பது கூடக் கெடுதல்தான். ஆனால் இதற்கு சுஜாதா மட்டும் விதிவிலக்கு.''

**''எழுத்து மக்களுடைய சமூக பொருளாதார சூழ்நிலையைப் படம் பிடித்துக் காட்டுவதாக இருக்க வேண்டுமா? அல்லது தனி மனிதனின் உணர்ச்சிகளையும் அவனுடைய அறிவையும் வெளிப்படுவதாக இருக்க வேண்டுமா?**

''ஒரு எழுத்தாளன் ஆரம்ப காலத்திலேயே சமூகத்தைப் பற்றி எழுத ஆரம்பித்தால் பிரபலமடையாமல் போய்விடுவான். நன்றாக வளர்ந்துவிட்ட பிறகு சமூகத்துக்கு ஏற்ற எழுத்துக்களை எழுதுவதுதான் அவனுக்கு நல்லது. அவசியமும் கூட. தனி மனிதனின் உணர்ச்சிகளும், தன் அறிவை வெளிப் படுத்துவதும் மட்டுமே ஒரு எழுத்தாளனின் கதைகளில் இருந்தால் அதுதவறு என்கிறேன். இயல்பாகக் கதை ஓட்டத்தோடு அவைகள் வெளிப்பட்டால் நன்றாக இருக்கும். உதாரணம் சொல்ல வேண்டுமென்றால் ரவா லட்டுக்கு உள்ளே இருக்கும் முந்திரிப் பருப்பைப்போல் அவைகள் இருக்க வேண்டுமே தவிர கண்ணாடி ஷோ கேஸில் ரவா லட்டின் மேலே குத்தி வைக்கப் பட்டிருக்கும் முந்திரிப் பருப்பைப் போல இருக்கக் கூடாது. 'தான்' என்ற அகம்பாவம் எழுத்தில் கூடாது.''

**''வாஷிங்டன் திருமணம்'' தொடர்கதைக்குப் பிறகு நீங்கள் எழுதிய எந்த நகைச்சுவை கதையும் அந்த அளவுக்குப் பிரபலமடையவில்லையே?**

''இந்தக் கேள்வி எனக்குத் துக்கத்தை வர வழைக்கிறது. எனக்குள்ளேயே ஒரு போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. வாழ்க்கைப் பிரச்னைகளிலும் பத்திரிகை வளர்ச்சியிலும் அடிபட்டு என் கவனங்கள் திசை திருப்பப்பட்டு இருக்கின்றன. ஆனால் அடிப்படையான நகைச்சுவை உணர்வு என் மனத்தடியில் இன்னும் இருக்கிறது என்பது நன்றாகத் தெரியும். தூண்டி விட்டால்தானே தீபம் எரியும்? அமரர் கல்கி அவர்களால் பயிற்றுவிக்கப்பட்ட எனக்கு நகைச்சுவை உணர்வு குறைய வாய்ப்பே இல்லை. ஆனால்



⌘ மேல் நாட்டில் பேரக் குழந்தைகளுக்குப் பரிசு தேர்ந்தெடுக்கிறார்



⌘ காரியாலய அறையில்



அதை வெளிப்படுத்த முடியவில்லையே என்ற ஏக்கம் நெஞ்சில் வழிகிறது.''

''அமரர் கல்கியை உங்கள் குருவாக ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள். எந்த அளவுக்கு நீங்கள் ஆசிரியராக இருந்த பத்திரிகைகளில் அவருடைய கொள்கைகளைப் பின் பற்றி வந்திருக்கிறீர்கள்?''

''ஏகலைவன் வில் வித்தைக்கு மட்டுமே துரோணரைக் குருவாக ஏற்றுக்கொண்டான். அதுபோல எழுத்துக்கு அமரர் கல்கி அவர் களைக் குருவாக ஏற்றுக் கொண்டுள்ளேன். பத்திரிகை நடத்துவது சம்பந்தப்பட்ட விஷ யங்களில் குமுதம் ஆசிரியர் எஸ். ஏ. .பி. அண்ணாமலை அவர்களை என் வழிகாட்டியாக ஏற்றுக் கொண்டிருக்கிறேன்.''

''பிரபலமான பத்திரிகைகளில் எழுதப்படும் எழுத்துக்கள் வியாபார நோக்குடன் எழுதப்படுவ தாகவும், பிரபலமடையாத பத்திரிகைகளில்தான் சமுதாய நோக்கோடு கதை வருகிறது என்றும் கூறப் படுகிறதே?''

''பிரபலமடையாத பத்திரிகைகளில் எழு தப்படும் சமுதாய நோக்குள்ள கதைகள் அதன் 'பர்ப்பஸ்'ஸை அடைவதில்லை. ஆனால் பிரபலமடைந்த பத்திரிகைகளும் சமுதாய நோக்குள்ள கதைகளைப் பிரசுரித்துத்தான் வருகின்றன. அந்தப் பத்திரிகைகள் பரவ லாக மக்களைச் சென்று அடைவதால் பயனும் அதிகமாக உண்டு.''

''ஐம்பது வருட எழுத்துலக வாழ்க்கையின் நிறைவை அளித்த விஷயம்?''

''நான் எழுதிய 'விசிறி வாழை' மற்றும், 'காரெக்டர்கள்' என்ற தலைப்பில் நான் எழு தியவை.''

''ஒரு காலக் கட்டத்தில் கருணாநிதியைத் தீவிர மாக ஆதரித்த நீங்கள் இப்போது மாறி இருக் கிறீர்கள். உங்கள் கொள்கைகளைக் கூற முடியுமா?''

''இது விஷயத்தில் கொள்கை என்று ஏது மில்லை. சொந்த விருப்பு வெறுப்புதான் காரணம். 'கதிரில்' நான் ஆசிரியராக இருந்த போது கலைஞரைத் தீவிரமாக ஆதரித்துக் கொண்டிருந்தேன். எங்களிடையே ஒருநெருங் கிய நட்பு இருந்தது. 1977 தேர்தலில் அண்ணா நகரில் ஒவ்வொரு வீட்டுக்கும் சென்று அவருக் காக ஓட்டு கேட்டுள்ளேன். ஒவ்வொரு முறையும் வெளி நாடு செல்லும்போதெல் லாம் அவரிடம் சொல்லிக் கொண்டு போவது தான் வழக்கம். 1980 சட்ட மன்றத் தேர் தலின்போது அமெரிக்கா செல்ல வேண்டி யிருந்தது. அந்தச்சமயத்தில் பாராளு மன்றத் தேர்தலில் மாபெரும் வெற்றி பெற்ற கலை ஞர் சட்ட மன்றத் தேர்தலிலும் வெற்றி பெற்று முதல்வராக வந்துவிடுவோம் என்ற தைரியத்தில் இருந்தார். 'நான் அமெரிக்கா செல்கிறேன். உங்களிடம் நேரில் சொல்லி விட்டுப் போகலாம் என்று நினைக்கிறேன்' என்று போனில் சொன்னேன். நேரில் சென்று அவரைச் சந்தித்தேன். அவர் அறைக்கதவைத் திறக்கும்போதே 'உங்களுக்காக ஒரு நிமிடம் ஒதுக்கியிருக்கிறேன்' என்றார். எனக்குப் பழ

⌘ இதற்கும் நேரம் உண்டு...

றென்று பொட்டில் அடித்தது போல் இருந்தது. அவருடைய கோபம் அவருக்காக அண்ணாநகர்த் தொகுதியில் வேலை செய்யாமல் நான் அமெரிக்கா செல்வதுதான் என்பதைத் தெரிந்து கொண்டேன். அவர் 'ஒரு நிமிடம்' என்று சொன்னவுடன் நானும், ''சரி, அப்போ நான் கிளம்பறேன். நான் நாளைக்கு அமெரிக்கா கிளம்பறேன்....' என்று சொன்னவுடன், 'இருங்கள், டிபன் சாப்பிட்டு விட்டுப் போங்கள்'' என்றார். 'இல்லை, கிளம்புகிறேன்' என்றவாறு வந்துவிட்டேன். எங்களது பத்து வருட நெருக்கம், இன்னும் மறக்க முடியாதது. மற்றொரு கோபம்: பத்து வருட காலமாக அவரை ஆதரித்து வந்த எனக்குத் தெரியாமல், அவரை எதிர்ப்பதையே குறிக்கோளாகக் கொண்டு, சந்தர்ப்ப சூழ்நிலையில் அவருடைய பேட்டியை வெளியிட வேண்டியிருந்த, எனக்குப் பிடிக்காத ஒரு பத்திரிகைக்குப்பேட்டிகொடுத்ததுதான். ஆனால் இன்னும் கருணாநிதி அவர்களை மதிக்கிறேன். அதே கோபத்தில்தான் என் சொந்தப் பத்திரிகையில் 'தோட்டம் முதல் கோட்டை வரை' என்று எம். ஜி. ஆரைப் பற்றி எழுதினேன். ஆனால் பெரும்பாலும் தனி மனிதர்களைப் பற்றி நினைக்காமல் பிரச்னைகளை ஆராய்ந்து அதன்படிதான் எழுதுகிறோம்.''

**''ஒரு எழுத்தாளன் பத்திரிகையாசிரியராக இருந்து பத்திரிகையின் மாபெரும் வளர்ச்சிக்கும் பாடுபட்டுவிட்டு, அதை விட்டு வெளியேறும்போது அவன் மனநிலை?''**

''ஒவ்வொரு முறையும் ஒரு பத்திரிகையை விட்டு வரு முன், பெரிய சாதனையைச் செய்தபின் நாம் வெளியேறியிருக்கிறோம் என்ற நம்பிக்கை எனக்கு இருந்தது. வேதனைகள் மனத்தின் ஒரு ஓரத்தில் இருந்தாலும் என் திறமையில் எனக்கு நம்பிக்கை இருந்தது. பதவி ஓய்வு பெறும் வயதைக் கடந்துவிட்ட எனக்கு பதவி நீடிப்பு (எக்ஸ்டென்ஷன்) தராமல், நான் அமெரிக்காவில் இருந்த போது வீட்டுக்குத் தபாலில் லெட்டரை அனுப்பிவிட்டார்கள். கதிரிலிருந்து வெளி வந்த என்னை அரவணைத்துக் கொண்டார் கலைஞர். ஆனால் குங்குமத்திலிருந்து நான் வெளியேறியதற்குக் காரணம் என் மகன்களின் எதிர்காலத்துக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்ற எண்ணத்தில்தான். குங்குமம் ஆசிரியர் நான்தான் என்றவுடன் லட்சக் கணக்கில் ஏஜெண்டுகளின் டெபாசிட் தொகை வந்தது. தனியாகவே பத்திரிகை ஆரம்பித்தால் வரவேற்பு நன்றாக இருக்கும் என்ற எண்ணத்தில்தான் தனியாகச் செயல்பட ஆரம்பித்தேன்.''

**''இன்று சினிமா ஹீரோ ஒர்ஷிப் போல எழுத்தாளர் ஒர்ஷிப்பும் அதிகமாகி விட்டதே. சில குறிப்பிட்ட எழுத்தாளர்களே திரும்பத் திரும்ப எழுதிக் கொண்டிருக்கிறார்களே?''**

''ஒர்ஷிப் பண்ணுவதையே வெறுக்கிறேன். இது ஒழிக்கப்பட வேண்டும். நன்றாக எழுதும் புதிய எழுத்தாளர்களை ஆதரித்தால் சில குறிப்பிட்ட எழுத்தாளர்களையே சுற்ற வேண்டிய அவசியம் இருக்காது.''

**''இப்போது வரும் தமிழ்ப்பத்திரிகைகள் வாசகர்களை லேசான விஷயங்களுக்கு அடிமைப்படுத்தி மக்களை சிந்திக்கவே விடக் கூடாது என்ற ஒரே எண்ணத்தில் செயல்படுவது போலத் தோன்றுகிறதே?''**

''மக்கள் லேசான விஷயங்களையே விரும்புகிறார்கள். கனமான விஷயத்தை மூன்று நான்கு பக்கங்கள் கொடுத்தால் பக்கங்களைப் புரட்டி விடுகிறார்கள். அந்தப் பக்கங்களில் நாற்பது துணுக்குகள் போடலாமே என்கிறார்கள். இன்றைய பத்திரிகைகளைப் படிப்பவர்கள் பெரும்பாலோர் இளைஞர்கள், யுவதிகள். இவர்கள் பேசுவதெல்லாம் சினிமா, அரசியல் தலைவர்களைப்பற்றிய அக்கப்போர்தான். இதைப் பற்றி சீரியஸாக நிறைய எழுதுவதற்கு என்ன இருக்கிறது? தொடர் கதை படிப்பவர்கள் கூட குறைவாகிவிட்டார்கள். இந்தச் சூழ்நிலையில் பணம் போட்டுப் பத்திரிகை நடத்துகிறவன், தலையில் துண்டைப் போட்டுக் கொள்ளாமல் இருக்க வேண்டுமென்றால், வாசகர்களுக்குப் பிடித்த 'லேட்டான' விஷயங்களைச் சொல்லிப் பிழைத்துக்கொள்ளுவதே. ஆனால் தனிப்பட்ட முறையில் என்னிடம் கேட்டால், வாசகர்களை எஜுகேட் செய்கிற அளவுக்கு ஒவ்வொரு இதழிலும் சில விஷயங்கள் இருப்பது அவசியம் என்பேன்.''

**''பத்திரிகை ஆசிரியரும் பத்திரிகை முதலாளியும் ஒருவராகவே இருப்பதிலும் தனித் தனியாக இருப்பதிலும் என்ன லாப நஷ்டங்கள் இருக்கின்றன?''**

''நான் பத்திரிகை ஆசிரியராக இருந்த போது நானே முதலாளியாகவும் இருக்கக் கூடாதா என்று எண்ணி இருக்கிறேன். இப்போது இந்த இரு பொறுப்புக்களையும் வகிப்பதனால், எழுத்து சம்பந்தப்பட்ட சில விஷயங்களில் எனக்கு நானே 'காம்ப்ரமைஸ்' செய்து கொள்கிறேன். அதே நேரத்தில் சில விஷயங்களில் தைரியமாக எழுதும்போது 'நாம் முதலாளியாக இருப்பதால்தானே எழுத முடிகிறது' என்றும் சந்தோஷப்பட்டுக் கொள்கிறேன். நான் ஆசிரியராக மட்டும் இருந்தபோது நிர்வாகத்தின் தலையீட்டை அனுமதித்ததில்லை.''

**''எழுத்தாளர், பத்திரிகையாளர் என்ற முறையில் நீங்கள் இன்னும் எதைச் சாதிக்க விரும்புகிறீர்கள்?''**

''நான் ஆசிரியராக இருக்கும் பத்திரிகையின் விற்பனை ஆறு லட்சத்தை எட்ட வேண்டும். ஆனால் அந்த நிலையை எட்ட வேண்டும் என்று நீசத்தனமாகப் போக மாட்டேன். அந்த லட்சியத்தை அடையாமல் நான் இறந்தாலும், 'ஒரு லட்சியத்தைக் குறி வைத்து சாவி வாழ்ந்து மறைந்தார்' என்ற பெயராவது இருக்குமல்லவா?''

பேட்டி : ப்ரியன்

படங்கள் : மஜு

அட்டை வண்ணப்படம் : ரவி

# சத்தான திட்டம்

'தனி ஒருவனுக்கு உணவில்லையெனில் ஜெகத்தினை அழித்திடுவோம்' என்று வீராவேசத்துடன் பாடிய பாரதியின் நூற்றாண்டில், முதல்வர் திரு எம்.ஜி. ராமச்சந்திரன் அமல்படுத்தியுள்ள சத்துணவுத் திட்டம் அந்த மகாகவிக்குச் சிறந்த அஞ்சலி.

காமராஜர் அடிக்கல் நாட்டிய பணிதான். அதற்குமேல் மாளிகை எழுப்புகிறார் இன்றைய முதல்வர்.

குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பாமல் கூலி வேலை செய்து சம்பாதிக்க அனுப்புவதைத் தடுத்து, இலவசக் கல்வி என்னும் நல் வாய்ப்பைச் சிறுவர் சிறுமியர் நன்கு பயன் படுத்திக் கொள்ள ஒரு தூண்டுகோலாக அமைந்தது காமராஜரின் மதிய உணவுத் திட்டம். அந்த நோக்கம் எம்.ஜி. ஆரின் திட்டத்திலும் உண்டு. அதற்கு மேலும் உண்டு.

கொடுக்கப்படும் உணவு சத்துணவாக இருக்க வேண்டும் என்பது ஒரு குறிக்கோள். புரதச்சத்து குறைந்தால் உடல் வளர்ச்சி மட்டுமன்றி மூளை வளர்ச்சியும் பாதிக்கப்படும் என்பது விஞ்ஞான உண்மை. எனவே பலசாலிகளான, அறிவாளிகளான ஒரு புதிய தலைமுறை உருவாக இத்திட்டம் வழி வகுக்கிறது. சமபந்தி போஜனம் என்பதால் சாதி சமய வேறுபாடுகள் மறைந்து ஒற்றுமையும் சகோதரத்துவமும் இளம் உள்ளங்களிலே வளரும். குறைந்த பட்ச அதிக பட்ச வயது வரம்புகள் தளர்த்தப்பட்டிருப்பதால் முன்னிலும் அதிகமான குழந்தைகள் பசியாறுவதுடன் 365 நாளும் திட்டம் அமலாகும் என்பதால் விடுமுறை தினங்களில் சிறுவர் சிறுமியர் வாட மாட்டார்கள்.

'இந்தத் திட்டம் மக்களை அரசாங்க உதவியையே எதிர் பார்த்திருக்கச் செய்து, அவர்களைப் பொறுப்பற்றவர்களாக்கி விடாதா?' அவ்விதம் நேராது. காரணம், காலையும் மாலையும் பெற்றோர்கள்தான் குழந்தைகளைக் கவனித்து அவர்களுக்குக் கஞ்சியோ கூழோ ஊற்ற வேண்டும். அதே நேரத்தில் ஒரு வேளை கூடத் தன் குழந்தைக்குச் சரியான உணவு தர வசதியற்ற தாய்மார்களுக்கு இத்திட்டம் வயிற்றிலே பால் வார்த்தது போலிருக்கும்.

ஓரளவு வசதி படைத்தவர்களும் தங்கள் பிள்ளைகளை இலவச உணவு பெற அனுப்ப வேண்டுமா எனில், அனுப்புவது நல்லது தான். இதனால் ஏற்றத்தாழ்வு உணர்வுகள், கர்வம், பொறாமை போன்றவை நீங்கும்.

திட்டம் முழு வெற்றி பெறத் தேவையானவை இரண்டு. பெற்றோர் – ஆசிரியர் ஒத்துழைப்பு முதலாவது. திட்டத்தின் நோக்கம் ஏதோ சோறு போடுவது மட்டுமல்ல; அதன் பின்னணியில் தமிழகத்தின் எதிர்கால வளமே இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு உற்சாகமாகச் செயல் பட வேண்டும்.

இரண்டாவது அம்சம் பொருளாதார வசதி. ஆண்டொன்றுக்கு 100 கோடி ரூபாய் என்ற கணிப்பு அடுத்து வரும் வருடங்களில் அதிகரிக்கும். நன்கொடைகள் ஓரளவுதான் கிட்டும். இதற்காக மேலும் வரிகள் என்றால் அதனைத் தாங்கப் போவது பெரும்பாலும் நடுத்தர, அடித்தள வர்க்கத்தினரே. இருப்பினும் மகிழ்ச்சியோடு தருவார்கள், பணம் விரயமாகாமல் பயனுறும் எனத் தெரிந்தால். முதல்வரே கூறியிருப்பது போல ஊரிலுள்ள நல்லோரான பெரியோர், குழுக்கள் அமைத்து, செலவினங்களையும் சமைக்குமிடம் சமைக்கும் விதம் ஆகியவற்றின் சுத்தம் சுகாதாரத்தையும் கண்காணிக்கலாம்.

எண்பது லட்சத்துக்கு ஹெலிகாப்டர் வாங்கி அதனை மாதம் ஒரு லட்சம் செலவில் தரு ஏறாமல் காத்துப் பராமரிப்பது போன்ற பலப்பல அனாவசியச் செலவினங்களைக் குறைத்து, அந்தப் பணத்தை இத்திட்டத்துக்குத் திசை திருப்பினால் அதிகமாக வரி விதிக்க அரசுக்கு அவசியமிராது.



1982 ஜூலை 18
துந்துபி ஆடி 2
மலர்: 40 இதழ்: 51

கல்கி



# ரவிகுல திலகன்

செம்பியன்

## 27

தஞ்சைக்குத் திரும்பும் வழியில் நண்பர்கள் இருவரும் ரொம்பவும் உற்சாகத்துடன் இருந்தார்கள். விஜயாலயன் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பல வெற்றி பெற்றிருந்தன. முத்தரையனைப் பாண்டியர் பக்கமாகச் சரியச் செய்ய வேண்டும்; அதன் மூலம் பல்லவேந்திரருக்கு முத்தரையன் மீது மனத்தாங்கல் ஏற்பட வழி வகுக்க வேண்டும் என்ற நோக்கத்தில் பெரும் பகுதி நிறைவேறி விட்டது. இனி மாதண்ட நாயகர் பாராசிரயன் மூலமாகப் பல்லவச் சக்கரவர்த்திக்குச் செய்தி கிட்டச் செய்ய வேண்டியதுதான் பாக்கி! அதுவும் எளிதாக நடந்துவிடும்.

"இதற்காக எத்தனை யோசனைகள்! எத்தனை திட்டங்கள்! மாறு வேடங்கள்! சந்திக்க நேர்ந்த ஆபத்துக்கள்தான் எத்தனை எத்தனை! ஜெயசிங்கா! உன்னையும் என்னையும் மட்டுமல்லாது குவளையையும் அல்லவா பேராபத்துக்கள் சூழ்ந்தன!"

"ஆம் பிரபோ! கடைசியாகக் குவளையையும் அவளுடன் தப்பி ஓடியவர்களையும் துரத்திப் பிடிக்குமாறு திவாகரன் கட்டளையிட்டபோது நான் பயந்துதான் போய்விட்டேன். என்ன விபரீதம் நேரப் போகிறதோ என்று என் மனம் படபடவென்று அடித்துக் கொண்டிருக்கையில் 'நாமும் அவர்களைத் துரத்திப் பிடிக்கும் முயற்சியில் மற்றவர்களை முந்திக்கொண்டு ஈடுபட வேண்டும்' என்று கூறியபடியே நீங்கள் குதிரை மீது பாய்ந்தேறியதும் எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ஆனாலும் உங்கள் உத்தரவுக்குக் கீழ்ப்படிவதுதான் முதல் கடமை என்ற அளவில் குழப்பத்தை ஒதுக்கிவிட்டுச் செயல்பட்டேன். துரத்தி வருகிற திவாகரனின் ஆட்களைத் திசை திருப்பிவிட்டு ஏமாற்றிக் குவளையைக் காப்பாற்றத்தான் அப்படி அவசரப்பட்டீர்கள் என்பது பிறகுதான் தெரிந்தது."

விஜயாலயன் சிரித்தான். "உன்னை ஒரு பக்கம் அனுப்பிவிட்டு நான் எதிர்த்திசையில் திரும்பிக் குதிரையைச் செலுத்த, திவாகரனின் வீரர்களும் இரு கூறுகப் பிரிந்து நம்மைப் பின்பற்ற, மூன்றாவது திசையில் குவளையும் சீனனும் மற்றவர்களும் தப்பிப் போய்விட்டார்கள்!"

நினைத்து நினைத்து மீண்டும் மீண்டும் சிரித்தான் விஜயாலயன்.

"அதைவிடவும் அரண்மனைக்குத் திரும்பச் சென்று கையைப் பிசைந்து கொண்டு நின்று நீங்கள் நடித்தது பிரமாதம்!" என்று பாராட்டினான் ஜெயசிங்கன். "'குவளை தப்பிப் போனது கிடக்கட்டும்; அத்தனை விலை உயர்ந்த குதிரை போய்விட்டதே' என்று நீங்கள் ஏகமாக விசனித்ததும் அதைப் பணயம் வைத்ததற்காக உத்தம சீலியை நொந்துகொண்டதும், அவள் உங்களைச் சமாதானப்படுத்த அரும்பாடு பட்டதும்... நல்ல நகைச்சுவை நாடகம்தான் போங்கள்!"

"ஜெயசிங்கா! எப்படியோ எல்லாம் நல்லபடியாக முடிந்தது! குவளை இந்நேரம் பழையாறையை நெருங்கியிருப்பாள்!"

"இருந்தாலும் எனக்கு ஒரே ஒரு குறை உண்டு."

"என்ன நண்பா?"

"உத்தமசீலியின் அன்பை உங்களால் பெற முடியாது போய்விட்டதே என்பதுதான்."

"விட்டுத் தள்ளு" என்று அலட்சியமாக விஜயாலயன் மொழிந்தாலும் இதயத்தில் சுருக்கென்று நண்பனின் வார்த்தைகள் தைக்கத்தான் செய்தன. "அவள் காதலைப் பெற்றிருந்தால் அவளை மட்டும்தான் அடைந்திருப்பேன். இப்போதோ அவளுடன் முத்தரையருடைய நாட்டின் ஒரு பகுதியையும் பெறப் போகிறேன்!"

"இருந்தாலும் உங்களை என்னவெல்லாம் பேசிவிட்டாள். எப்படித்தான் பொறுத்துக் கொண்டீர்களோ!"

"ஆம் நண்பா! இப்போது நினைத்தாலும் உடம்பெல்லாம் பற்றி எரிவது போல் தகிக்கிறது!"

"அது ஏன் என்று யோசித்தீர்களா இளவரசே! எதனால் கட்டுக்கடங்காத கோபம் வருகிறது உங்களுக்கு?"

"அவள் பேசியதைக் கேட்க எந்தத் தன்மானமுள்ள வீரனுக்குக் கோபம் வராது?"

"அதனால் மட்டும் இத்தனை ஆத்திரம் என்று சொல்ல முடியாது. அவள் கூறியதில் நியாயமும் இருந்ததால்தான் இத்தனை ஆவேசம் பொங்குகிறது! இதுமனிதஇயற்கை. அதிலும் அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு இயல்பு!"

"ஜெயசிங்கா!" என்று அதட்டினான் விஜயாலயன். "நீயுமா?"

"இளவரசே! உங்கள் விருப்பத்துக்கு உத்தமசீலி இணங்கியிருந்தால் உங்களை விடவும் மகிழ்ச்சியடையப் போகிறவன் நான்தான். அவள் பிடிவாதம் கர்வத்தால் எழுந்தது; மூடத்தனமானது என்று ஒப்புக்கொள்கிறேன். ஆயினும் தர்க்க வாதம் என்று பார்த்தால் நேற்று வன போஜனத்தின்போது அவள் பேசியதில் குற்றம் ஏதும் என்னால் கண்டு பிடிக்க முடியவில்லை. என்னை மன்னியுங்கள்!"

"ஜெயசிங்கா! உன் மனம் எனக்குப் புரிந்து விட்டது! நீ அவளை இன்னமும் காதலிக்கிறாய் இல்லையா? என்னை இடையூறாகத்தானே எண்ணுவாய்? இனி உன்னைநம்புவதில்

பயனில்லை. இதுவரை நீ செய்த உதவி போதும். இதற்கே நான் எவ்வளவோ நன்றிக் கடன் பட்டுப் போயிருக்கிறேன்...''

''ஆதங்கத்துடன் விஜயாலயன் கூறவும், ''பிரபோ!' என் மனத்திற்கு தோன்றியதை ஒளிவு மறைவின்றிச் சொன்னேன். ஏற்பதும் ஏற்காததும் தங்கள் விருப்பம். ஆனால் இதற்காக என்னை அந்நியனுக்கிச் சந்தேகிக்காதீர்கள்''என்று தழுதழுத்தான் ஜெயசிங்கன். ''என் உடல் பொருள் ஆவி அனைத்தும் நீங்கள் போட்ட பிச்சை என்பதை ஒரு நாளும் மறக்க மாட்டேன். இந்த எண் சாண் உடம்பில் கடைசி மூச்சு உள்ளவரை தங்கள் கட்டளைகளைதுவானாலும்நிறைவேற்றுவேன்! இதில் தங்களுக்கு இலவலேசமும் சந்தேகம் ஏற்படுமானால் என் தாயாரின் ஆவி நிம்மதி இழந்து தவிக்கும். என்னைச் சும்மா விடாது!''

விஜயாலயன் அவனுடைய திரண்ட புஜத்தை நட்பின் அடையாளமாகப் பற்றி அழுத்தினான். ''உன்னுடைய விசுவாசத்தைச் சந்தேகிப்பது போல் நானும் பேசியிருக்கக் கூடாதுதான். அசட்டுத்தனமான இந்தச் சிறிய வாக்கு வாதத்தை மறந்து விடுவோம். இனி ஆகவேண்டியதைக் கவ



னிப்போம். குதிரையைத் தட்டிவிடு!'' என்ருன்.

● ● ●

மாலை நேரத்தென்றலைஅனுபவித்தபடியே மாதண்ட நாயகர் பாராசிரயனும் அராபியனும் ஜெயசிங்கனும் மாளிகையின் நிலா முற்றத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். மதுக் கோப்பைகளை நிரப்பிய பணிப் பெண்களை அப்பால் போகச் சொல்லிவிட்டுத் தாங்கள் சந்திரலேகை சென்றுவந்த விருத்தாந்தங்களைக் கூறினன் ஜெயசிங்கன்.

அனைத்தையும் கேட்டுக் கொண்ட பாராசிரயன், ''அப்படியா சொல்கிறீர்கள்? சந்திரலேகையில் சந்தேகிக்கும்படியான சதிச் செயல்கள் எதுவுமே நடக்கவில்லையா? பல்லவ மாதண்ட நாயகர் ரணசயனிடம் நான் தந்த சிம்ம இலச்சினையைக் காண்பித்தீர்கள் அல்லவா? என் பெயரைக் குறிப்பிட்டீர்கள் அல்லவா?'' என்று கேட்டார்.

''ஆம் ஐயா! எங்களை முழுவதுமாக நம்பினார் ரணசயன் என்பதில் ஐயமில்லை. ஆயினும் அவர் தங்களுக்கு அனுப்பித் தரக் கூடிய செய்தி ஏதுமில்லை'' என்று கூறிய ஜெயசிங்கன், சிம்ம இலச்சினையைப் பாராசிரயனிடம் திரும்பத் தந்தான். அராபியனும் அவ்வாறே செய்தான்.

''இத்தனை உறுதியாக நீங்கள் கூறும்போது மகிழ்ச்சியாகத்தான் இருக்கிறது'' என்றார் பாராசிரயன்.

''தாங்கள் கூறினேமா? இல்லையே! முத்தரையர் தலைநகரில் உள்ள பல்லவ மாதண்ட நாயகர் ரணசயன் கூறினார் என்றுதானே சொன்னேன்.''

திடுக்கிட்டவராகநிமிர்ந்தார்பாராசிரயன். மதுக் கோப்பையைக் கீழே வைத்துவிட்டு ''புதிர் போடாதீர்கள்'' என்றார் கண்டிக்கும் குரலில்.

''புதிர் ஏதுமில்லை பாராசிரயரே! நாங்கள் பார்த்ததும் கேள்விப்பட்டதும் வேறு. ரணசயன் சொல்லி யனுப்பியது வேறு.''

''நீங்கள் என்ன பார்த்தீர்கள்? கேள்விப்பட்டீர்கள்?''

''ஐயா பாண்டிய நாட்டிலிருந்து முத்தரையருக்கு ரகசிய தூதர்கள் வந்தார்கள். வந்தவர்களுள்ஒருவன் மாறுவேடத்திலிருந்த இளவல் வரகுணன்!''

ஆச்சரியத்தில் விழிகள் விரிய பாராசிரயர் மீசையை ஒதுக்கிக் கொண்டு மேலும் ஒரு மிடறு மதுவை விழுங்கினார்.

''சொல்லுங்கள்! சொல்லுங்கள்!'' என்று துரிதப்படுத்தினார். ''தூது... எதற்காகத் தூது?''

''உணவு அனுப்பித் தந்து உதவ வேண்டும் என்று கோரினார்கள். முத்தரையரும் சம்மதித்திருக்கிறார்.''

''எப்படி நான் நம்புவது? சாட்சியம்?'' என்று பரபரத்தார் பாராசிரயன்.

''நான்தான் ஐயா, சாட்சியம்!''

''நீயா?''

''ஆம்! நானேதான். உணவு தானியங்களை மூட்டை மூட்டையாக வண்டிகளில் ஏற்றிக் கூடல்மாநகருக்கு அனுப்பும் பொறுப்பை என்னிடம்தான் ஒப்படைத்திருக்கிறார் முத்தரையர். இவ்வளவு பெரிய பொறுப்பை நிறைவேற்றக் கூடிய வல்லமை படைத்த வியாபாரி அவர் ஆட்சியில் என்னைத் தவிர வேறு யார்?''

''ஆ!'' என்று ஆச்சரியத்தால் திறந்த வாய் மூடாமல் சில கண நேரம் அவர்களையே வெறித்து நோக்கிய பாராசிரயன் திடுமெனக் கடமை உணர்வும் இயக்கமும் திரும்பப் பெற்றவராக, ''அப்படியானல் நான் உன்னை உடனே கைது செய்தாக வேண்டும்'' என்று கூறியதுடன் ''யார் அங்கே!'' என்று குரலை உயர்த்தவும் செய்தார்.

''செய்யுங்கள் ஐயா! பல்லவேந்திரரிடம் விசுவாசம் மிகுதியால் உண்மையைத் தங்களிடம் வெளியிட்டதற்கு இதுதான் வெகுமதி என்ருல் கைது செய்யுங்கள். நான் எதிர்க்க மாட்டேன். என் ஊழியர்களையும் அடங்கி இருக்கச் செய்வேன். ஆனல்...''

''ஆனல்?''

''தாங்கள் யோசிப்பது நலம்!''

''எது குறித்து?''

எட்டிப் பார்த்த பணிப் பெண்களையும் தமது மெய்க்காவலர்களையும் அப்பால் போகும்படி கையசைத்தார் பாராசிரயர். அவர்கள் தலை மறைந்ததும் ஜெயசிங்கன் தொடர்ந்தான். ''உங்களுக்கு நினைவில்லாமல் போகாது. முன்பொரு முறை பாண்டியன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் ஈழப் படையெடுப்பில் ஈடுபட்டான். அப்போது பல்லவ சக்கரவர்த்தியிடமே தூது அனுப்பிச் சில கப்பல்களை விலை பேசி வாங்கிக் கொண்டான். அப்போது சக்கரவர்த்தி என்ன சொன்னர்? 'பரம்பரையாக பாண்டிய மன்னர்களுடன் நமக்கு இருந்து வரும் பகைமை வேறு;



**அடுத்த இதழில்**

**1 2 3 4 5**

**சிறுகதைகள்**

வாணிபம் வேறு' என்று கருதவில்லையா? அது போலவே இந்த உணவு தானிய வர்த்தகத்தையும் பல்லவேந்திரர் எடை போடலாம் அல்லவா?''

பாராசிரயன் யோசித்தார். ''ஆமாம்! ஆமாம்! பல்லவேந்திரர் மனம் எந்தச் சந்தர்ப்பத்தில் எப்படிச் செயல்படும் என்று யார் கண்டது?'' என்றவர் மதுக் கோப்பையை மீண்டும் நிரப்பிக் கொண்டார். ''விஜயாலயன் ரகசியமாகப் படை திரட்டும் விவரத்தையும் முத்தரையன் ரகசியமாகப் பாண்டியனுடன் வர்த்தக ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளதையும் ஓலை எழுதி இலச்சினை பதித்துக் காஞ்சிக்குத் தூதனை அனுப்புகிறேன். பிறகு பல்லவேந்திரரின் விடேல் விடுகு ஆணையை எதிர்பார்த்துக் காத்திருந்தால் ஆயிற்று... எனக்கு விடை கொடுங்கள். நாளை நான் பழையாறை திரும்ப வேண்டும்.''

''ஐயா...அரசாங்கக் காரியங்களில் தங்கள் கவனம் சடுபட்டு விட்டதென்றாலும் இங்கிருந்தபடியே அவற்றைக் கவனிக்கலாமே? காலில் பூரண ஆரோக்கியம் திரும்பிய பின் புறப்படுங்கள். இப்போது என்ன அவசரம்?''

''அழகுதான்'' என்றார் பாராசிரயன். ''என் தலைமையகம் பழையாறைதான். தேவையின்றி அதிக நாள் நான் தஞ்சையில் தங்கியிருந்தால் சக்கரவர்த்தியின் அதிருப்தியைச் சம்பாதிப்பது மட்டுமல்ல; ரணசயனுக்கும் என்மீது வருத்தமுண்டாகும். ஏதோ அவன் பொறுப்பில் விடப்பட்ட பிரதேசத்தின்மீது நான் என் அதிகாரத்தைப் பிரயோகிப்பதாக எண்ணுவார். பல்லக்கு ஏற்பாடு செய்து விட்டேன். பல்லக்குத் தூக்கிகள் வழியில் நான்கைந்து இடங்களில் மாறவும் உத்தரவுகள் பிறப்பித்தாகி விட்டது.''

''அப்படியானால் இன்றிரவு மட்டும் தான் தங்களை உபசரிக்கும் பாக்கியம் எனக்குண்டு என்று சொல்லுங்கள்!''

''கவலைப்படாதே! இந்த ஓர் இரவில் இருபது நாள் தங்கினால் எவ்வளவு உபசரிப்பாயோ அத்தனையையும் செய்துவிடு: ஏற்கிறேன்!'' என்று கூறிக் கண் சிமிட்டிச் சிரித்தார் பாராசிரயன்.

● ● ●

**ம**றுநாள் பாராசிரயனின்பல்லக்குப் புறப்பட்டுச் சென்ற சில நாழிகை நேரத்தில் அராபியனும் தன் நண்பனிடம் தனிமையில் விடை பெற்றான். ''ஜெயசிங்கா! நீ எனக்கு இதுவரை செய்த உதவிகள் எல்லாம் பெரிதில்லை. இந்திர விழாவுக்கு ஒரு சிறப்பான ஏற்பாட்டைச் செய்துவிடு! தஞ்சை கண்டும் கேட்டுமிராத ஒரு மாபெரும் கலை விழாவாக அது விளங்கட்டும்! தலைமை தாங்கி நடத்தித் தர வரும் உத்தமசீலியும் திவாகரனும் திகைத்துப் போய் விடவேண்டும்!'' என்றான்.

''சித்தம் இளவரசே!'' என்று கூறிய நண்பனை ஆலிங்கனம் செய்துகொண்டு முதுகில் அன்புடன் தட்டிக் கொடுத்தான்.

அவர்கள் பிரிந்தபோது இருவர் அதரங்களிலும் புன்னகை அரும்பி விருந்ததோடு நான்கு கண்களிலும் நீரும் ததும்பி நின்றது.

● ● ●

**பா**ராசிரயன் வந்து சேருவதற்கு முதல் நாளே நந்திபுரியாம் பழையாறையை அடைந்து விட்டான் விஜயாலயன். அந்தி நேரமா யிருந்தபோதிலும் அவன் அராபிய உடையிலே காணப்பட்ட போதிலும் புலி இலச்சினையும், ''பதுங்கிப் பாயும் புலி'' என்ற சங்கேத மொழியும் அவனுக்குக் கோட்டைக் கதவைத் திறந்துவிட, நேரே அரண்மனைக்குப் போகாமல் குவலையின் இல்லம் நோக்கிக் குதிரையைச் செலுத்தினான். புரவியும் களைத்திருந்தாலும் பயணத்தின் இறுதிக் கட்டத்தை அடைந்து விட்டோம் என்று உணர்ந்தாற் போல் பணியை முடித்து ஓய்வெடுக்க அவசரப்பட்டது.

விஜயாலயனின் தேகத்தின் ஒவ்வொரு அணுவும் குவளையின் அரவணைப்புக்காக ஏங்கித் துடித்துக் கொண்டிருந்தது. எத்தனை காலம் ஆயிற்று அவளைப் பிரிந்து! சந்திர வேளையில் ஏற்பட்ட பட்டதும் படாததுமான சற்று நேரத் தொடர்பு அவன் ஏக்கத்தையும் ஆர்வத்தையும் மேலும் கிளறி விட்டிருந்தது.

குவளையின் இல்லம் சேர்ந்து பயணக் களைப்பு நீங்கக் குளிக்க வேண்டும்; பசியாற உண்ண வேண்டும்; பிறகு....பிறகு.... பிறகென்ன? விடிய விடிய அவள் அனுபவங்களையெல்லாம் கூறக் கேட்க வேண்டும்... கதை பேசுவது மட்டும்தான் காரியமா? இடையிடையே வேறு அலுவலும் உண்டுதான்!... சிரித்துக் கொண்டான் விஜயாலயன்.

கதவைத் தட்டி ''குவளை!'' என்று குரல் கொடுத்ததுமே வந்திருப்பது யார் எனப் புரிந்து கொண்டவளாய்ச் சதங்கை ஒலிக்க ஓட்டமாய் ஓடிவந்து கதவைத் திறந்தாள் அவள். எந்தக் கணமும் அவன் வருவான் என்று எதிர்பார்த்துக் கொண்டே இருந்தாள் போலும்! அப்போது அலர்ந்த மலராகக் காணப்பட்டாள். எண்ணெய் தேய்த்துக் குளித்திருந்ததால் உடலெல்லாம் தீப ஒளியில் ஒரு மினுமினுப்பு; தோகையென நீண்டு சரிந்த கருங் கூந்தலில் அகில் மணம்; மணி ஒளியாய்ப் பிரகாசித்த கண்கள்; கொடியாக அவன் கழுத்தைச் சுற்றி வளைத்த வளைக் கரங்கள்; அவன் அகன்ற மார்பின் உறுதியைச் சோதித்த இளமைகள்; அவன் கழுத்தில் தஞ்சம் புகுந்த வதன எழில்; அவன் அணைப்புக்கு ஏங்கி நொடிந்த இடை; அவளில் ஐக்கியமான உடலை நாம் இனித் தாங்குவானேன் என்று துவண்டு விட்ட கால்கள்!

அராபிய உடையில் அவனைக் கண்டதுமே அவள் புரிந்து கொண்டு விட்டாள். ''பிரபோ அரண்மனைக்குக் கூடச் செல்லாமல் இந்த ஏழையைப் பார்க்க நேரே இங்கே வந்தீர்களா!'' என்று கேட்டபோது பெருமிதமும் மகிழ்ச்சியும் குரலில் போட்டியிட்டன. கூடவே ஒரு விம்மல் ஒலியும் எழுந்தது!

நீண்ட தூரப் பயணம் காரணமாகப் புழுதி படிந்திருந்த தன் மீது புத்தம் புதிய மலரான அவள் சாய்ந்ததையே பொறுத்துக் கொள்ள முடியாதவனாகத் தவித்த விஜயாலயன். இந்த விசும்பலைக் கேட்டதும் அந்த மனத் தடையை மீறி அவளை ஆர்வத்துடன் இறுக அணைத்து. ''அசடே! எதற்கு அழுகிறாய்? நான்தான் வந்து விட்டேனே'' என்று கூறி முதுகைத் தடவிக் கொடுத்து உச்சி முகர்ந்தான். பிறகு. ''ஓ! எனக்குப் புரிந்து விட்டது! அந்தச் செருக்கி உத்தம சீலியை நினைத்துக் கொண்டு விட்டாயா?'' என்று கேட்டான் இளநகையோடு.

''இளவரசே! அந்த எழிலரசி என்னைத் தாங்கள் சந்திக்கு முன்னரே தங்கள் இதயத்தை ஆக்கிரமித்துக் கொண்டு சர்வாதிகாரம் செலுத்தி வருகிறாள் என்பது எனக்குத் தெரியும். அவள் மீது தாங்கள் சொரியும் அன்புப் பெரு மழையில் ஒருசில துளிகள் என் மீது பட்டால் போதும். என் காதல் துவளாமல் தளிர் விட்டுப் பிழைத்துக் கொள்ளும். நான் அழுவதற்குக் காரணம் அதுவல்ல....''

''பிறகு? வேறென்ன சொல்லு குவளை!''

''இளவரசே! தாங்கள் முதலில் சோழ மாளிகைக்குச் சென்றிருந்தால் தாங்களே தெரிந்து கொண்டிருக்கலாம். இப்போது அதைத் தங்களுக்குத் தெரிவிக்கும் கடமை இந்தத் துர்ப்பாக்கியசாலிக்கு நேர்ந்திருக்கிறது'' என்றாள் குவளை. பொங்கிய துயரம் அவள் நெஞ்சை நனைத்தது. (தொடரும்)

---

நம் பிரதமரின் செல்வமகன் ராஜீவ் காந்திக்கு கோகோ கோலா என்றால் கொள்ளை ஆசையாம். ஆனால் இந்தியாவில் கோகோ கோலா கிடைப்பதில்லையே! அதற்காக என்ன குடிக்காமலா இருக்க முடிகிறது! இவருக்கென்று பாகிஸ்தானிலிருந்து கோகோ கோலா இறக்குமதி செய்யப்படுகிறதாம். பிரதமரின் பேரக் குழந்தைகளான ராதல், பிரயங்கா ஆகிய இருவரும் லண்டனில் தயாராகும் தயிரைத் தான் விரும்பிச் சாப்பிடுகிறார்களாம், அதனால் லண்டனில் உள்ள பிரதமரின் குடும்ப நண்பர் ஸ்வராஜ் பால் தயிர் அனுப்பும் வேலையைத் தவறாது செய்து வருகிறாராம்!

ஆதாரம்: ஸண்டே; ஆன்லுக்கர்

-அமுதன் மைந்தன்





# ரஸிகமணி நூற்றாண்டு

## கட்டுரைப் போட்டி

**கட்டுரைப் போட்டி: பரிசு ரூ 2000**

ரசிகமணி நூற்றாண்டு நிறைவையொட்டி. சென்னை டி. கே. சி. வட்டத் தொட்டியும் கல்கி நிறுவனமும் இணைந்து இந்தப் போட்டியை நடத்துகிறது.

சென்னை வி. நாராயண அய்யர் அறக் கட்டளை ரூ. 2000 பரிசுத் தொகையை வழங்குகிறது.

முதல் பரிசு ரூ. 1001. இரண்டாவது பரிசு இரு கட்டுரைகளுக்குத் தலா ரூ. 501.

தவிர, பிரசுரமாகும் கட்டுரைகளுக்கு கல்கி நிறுவனம் வழங்கும் வழக்கமான சன்மானம் உண்டு.

கட்டுரைகளுக்கான தலைப்புக்கள்: (1) ரசிகமணியின் ரசிக உள்ளம் (2) ரசிகமணியும் கம்பரும் (3) ரசிகமணி வளர்த்த கலைகள் (4) ரசிகமணியின் சமய நோக்கு (5) ரசிகமணியின் கடித இலக்கியம்.

இவற்றில் ஏதேனும் ஒன்று பற்றியோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட தலைப்புக் களிலோ கல்கியில் இரண்டு பக்கங்களுக்கு மேற்படாத அளவில் கட்டுரைகள் எழுதலாம். ஆனால் ஒருவருக்கு ஒரு கட்டுரைக்கு மட்டுமே பரிசு கிடைக்கும்.

நடுவர்கள்: (1) ஜஸ்டிஸ் மகராஜன்; (2) மீ. ப. சோமு; (3) சுந்தா; (4) ல. சண்முகசுந்தரம்: (5) கி. ராஜேந்திரன், ஆசிரியர், கல்கி

**முடிவு தேதி ஜூலை 31 வரை ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது.**

உறையின் மேல் ''**ரசிகமணி நூற்றாண்டு கட்டுரைப் போட்டி**'' என்று குறிப்பிடவும். பிரசுரமாகாத கட்டுரைகளைத் திரும்பப் பெற விரும்பினால் போதிய தபால் தலைகள் ஒட்டிய சுய விலாசமிட்ட உறைகளைக் கட்டுரையுடனேயே அனுப்புதல் வேண்டும். கடிதப் போக்குவரத்துக் கிடையாது.

ரசிகமணியின் நூல்களில் ''இதய ஒலி'' (ரூ. 9) ''கம்பர் யார்?'' (ரூ. 5) ஆகியன ''வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, சென்னை-17'' என்ற விலாசத்தில் கிடைக்கும். இவ்விரு புத்தகங்களுக்குமான விலையில் போட்டியில் கலந்து கொள்வோருக்கு பத்து சதவீதம் தள்ளுபடி உண்டு.

''ரசிகமணியின் கடிதங்கள்'' என்ற ரூ. 20 விலை கொண்ட புத்தகத்தை ரூ. 15 சலுகை விலையில் (பதிவுத் தபால் கட்டணம் ரூ. 5 தனி) கீழ்க்கண்ட முகவரியில் பெற்றுக் கொள்ளலாம். -'டி.கே.சி.வட்டத் தொட்டி, 6, N தெரு, கீழ்ப்பாக்கம் தோட்டம் காலனி, சென்னை-10. இந்நூலை வானதி பதிப்பகத்திலும் கேட்டுப் பெறலாம்.

''நான் கண்ட டி. கே. சி.'' நூலாசிரியர் எஸ். வி. எஸ். பிரசுரம்: அமுத நிலையம், 46,ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை-14 விலை ரூ. 6-50. 1 ரூ தள்ளுபடி செய்து ரூ 5-50க்குக் கிடைக்கும்.

ரஸிகமணி நூற்றாண்டு விழா மலர்: விலை ரூ. 20. கிடைக்குமிடம்: உலக இதய ஒலி C-6, வெங்கடேச அக்ரஹாரம், மயிலாப்பூர், சென்னை-4 (15 சதம் தள்ளுபடி உண்டு.)

ரசிகமணியின் மற்ற நூல்களான -'கம்பர் தரும் ராமாயணம்'', ''முத்தொள்ளாயிரம்'' ஆகிய இரண்டும் பொது நூலகங்களில் உள்ளன.

**வி**ம்பிள்டன் வீரர்கள் ஆண்டுக்கொரு தரம்தான் ஆடுகிறார்கள். விம்பிள்டன் சீசனில் பல மாட்ச்கள் நடந்து, கடைசியில் ஃபைனலில் ஒருவர் வெல்கிறார். மற்ற மாதங்களில் டல் அடிக்கும். மேலும் விம்பிள்டன் செமி ஃபைனல், பைனல் மேட்சுகளில்தான் நம்மில் பெரும்பாலோருக்கு சுவாரஸ்யம் தட்டுகிறது.

ஆனால் நம்பிள்டன் வீரர்கள் விஷயம் இப்படியல்ல. அவர்கள் வருஷம் 365 நாளும் அரசியல் டென்னிஸ் ஆடி நம்மை உற்சாகப் படுத்துவார்கள். அதுமட்டுமல்ல. நம்பிள்டன் வீரர்கள் பங்கேற்கும் எல்லா மேட்சுகளுமே அதி சுவாரஸ்யம்! நாள் தவறாமல் நாம் ஸ்கோரைக் கணித்து, பரபரப்புடன், 'அப்புறம் என்ன ஆகுமோ? யார் ஜெயிப்பார்களோ?' என்று கையைப் பிசைந்து கொண்டிருப்போம். ஒரே த்ரில்தான்! நம்பிக்கையான நம்பிள்டன் வீரர்கள் இப்போது ஆடிவருகிற சில டென்னிஸ் மேட்சுகளையும் ஸ்கோர் போர்டையும் கவனிக்கலாமா?

**எம். ஜி. ஆர். — கருணாநிதி**

''தமிழ் நாட்டில் மலையாளி ஆட்சி நீடிக்கக் கூடாது!'' — கருணாநிதி 15 பாயிண்ட் தட்டிக் கொண்டு போகிறார்!

''கருணாநிதி தமிழனே இல்லை!'' — இந்தக் கண்டுபிடிப்பை யொட்டி எம். ஜி. ஆரின் ஸ்கோர் 15!

''நாம் மலையாளி என்று எம். ஜி. ஆரே. ஒப்புக்கொண்டிருக்கிறாரே!'' — கருணாநிதி ஸ்கோர் 30 ஆக உயர்கிறது!

''கருணாநிதி தமிழன் இல்லை என்பதற்கு ஆதாரம் காட்டுவேன்'' — குழந்தைவேலுவின் அறிக்கை எம். ஜி. ஆருக்கும் பாயிண்டை 30 ஆக உயர்த்துகிறது.

''யார் தடுத்தாலும் உண்ணாவிரதம்!'' கருணாநிதி 40!

உண்ணாவிரதம் ஒத்திப் போடப்படுகிறது— டியூஸ்.

கட்சித் தொண்டர்கள் உண்ணாவிரதம்!— அட்வான்டேஜ் கருணாநிதி!

தி. மு. க. கட்சித் தொண்டர்கள் கைது— டியூஸ்!

மேலே என்ன நடக்கப் போகிறது? விரல் நகங்களைக் கடித்துக் கொண்டு காத்திருங்கள்!

**கல்லூரி மாணவர் — பல்லவன் நிர்வாகிகள்**

பஸ் டோக்கன் விலை உயருகிறது; ஆல் ரூட் பாஸ் கிடையாது. — மாணவருக்கு 15 பாயிண்ட்.

மாணவர் கிளர்ச்சி — மாணவர் ஸ்கோர் 30 ஆக உயருகிறது!





மாணவர் பஸ்களை நொறுக்கிச் சேதப் படுத்தவும் — பல்லவனுக்கு 15 பாயிண்ட்.

பச்சையப்பன் கல்லூரி காம்பவுண்ட் சுவர் கேட்டை அடைத்துச் சுவர் எழுப்பப்பட பல்லவனுக்கும் பாயிண்ட் 30 ஆக உயர்கிறது!

அந்த சுவரில் ''சென்ட்ரல் ஜெயில்'' என்று மாணவர் எழுதித் தங்கள் ஸ்கோரை 40 ஆக உயர்த்திக் கொள்கின்றனர்!

அடுத்து என்ன? இந்த கேம் மாணவருக்கா பல்லவனுக்கா? உங்கள் உதட்டை ஆர்வம் தாங்காமல் கடித்துக் கொண்டதில் ரத்தம் வந்து விட்டது பாருங்கள்!

### பங்காரப்பா — குண்டுராவ்

தமிழகத்தில் மட்டுமல்ல, நம்பிள்டன் வீரர்கள் நம் நாடு முழுவதும் இருக்கிறார்கள். சளைக்காமல் ஆடுகிறார்கள்.

குண்டு ராவ் மீது குற்றச்சாட்டுகளை மேலிடம் விசாரிக்கவில்லை என்பதால் பங்காரப்பா இ. காங்கிரஸிலிருந்து ராஜினாமா —அவருக்கு 15 பாயிண்ட்.

தம்முடன் வேறு மூன்று எம். எல். ஏக்களையும் ராஜினாமாச் செய்ய வைக்கிறார்——பாயிண்ட் 30 ஆக உயர்கிறது!

இதே சமயத்தில் குண்டு ராவின் ஒரு விலை நிர்ணய ஊழல் காரணமாக வனத்திரப் பொருள்கள் விற்பனையில் கர்நாடக மாநில அரசுக்கு 22 கோடி நஷ்டம் என்று செய்தி வெளியாகிறது. — பங்காரப்பாவின் ஸ்கோர் 40!

இது லவ் கேம் ஆகிவிடுமோ? இரவெல்லாம் தூக்கம் பிடிக்காமல் தவியுங்கள்!

### கன்னு — ஜெயில் சிங்

''மனச்சாட்சிப்படி வோட்டு போடுங்கள்'' எனக் கன்னு கூறவும் அவருக்கு 15பாயிண்ட்.

''மனச்சாட்சிப்படி வோட்டு ஜனநாயகத்தை அவமதிப்பதாகும்'' என இந்திரா சொல்ல கன்னு 30 பாயிண்ட்!

''நேருஜி குடும்பத்தை நேசிக்கிறேன்'' என ஜெயில் சிங் கூறவும் கன்னுவின் பாயிண்ட் 40 ஆக உயர்ந்து விடுகிறது!

பார்த்தார் ஜெயில் சிங். இலேசில் ஆட்டத்தை இழப்பாரா? ''நேருஜி குடும்பத்தை நேசித்தாலும் நடுநிலையாளனாக இருப்பேன்'' என்று கூறி 15 பாயிண்டைத் தட்டிக்கொண்டார். கூடவே ''இந்திரா காங்கிரஸ்காரனாக இருந்தவனென்றாலும் கட்சி சார்பற்றுச் செயல்படுவேன்'' என்று சொல்லி 30 பாயிண்டுக்கு உயர்ந்தார். பின்னர் ''அரசியல் சாசனத்தை மதிப்பேன்'' என்று ஒரே போடாகப் போட்ட ஜெயில் சிங் ஸ்கோரை ட்யூஸுக்குக் கொணர்ந்தார். ''பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு எங்கள் வோட்டு'' என்று கருணாநிதி பெருமைப்படவும் இப்போதைய ஸ்கோர் அட்வான்டேஜ் ஜெயில்சிங்! அடுத்த ஸ்மாஷ் ஷாட்டில் ஜெயில் சிங்குக்கு வெற்றி என்பது நமக்கு நன்கு தெரிந்திருந்தாலும் அவர் ஆட்டத்தைச் சமாளித்த விதம் கண்டு வியக்கிறோம்!

### பீகார் இந்திரா காங்கிரஸ் — எதிர்க் கட்சிகள்

பீகாரில் அவுரங்காபாத் மாவட்டத்திலும் மோன்கைர் மாவட்டத்திலும் 6 ஹரிஜன்களும் 12 முஸ்லிம்களும் படுகொலை செய்யப்பட்டதை யொட்டி எதிர்க் கட்சிகள் இந்த விஷயத்தைச் சட்டசபையில் விவாதத்துக்குக்கொண்டுவர முயன்றபோது அவர்களுடைய பாயிண்ட் 15.

இதற்கு அனுமதி வழங்கப்படாதபோது பாயிண்ட் 30 ஆகிறது. விவாத உரிமைகோரி ஆர்ப்பாட்டம் செய்ய பாயிண்ட் 40 ஆயிற்று!

இந்த ஆர்ப்பாட்டத்தைக் காரணம் காட்டி பலவந்தமாக எதிர்க் கட்சியினர் அனைவரும் சட்ட சபையிலிருந்து வெளியேற்றப்பட்டபோது அவர்கள் கேமில் வெற்றி பெற்றதுடன் இ. காங்கிரஸ் அமைச்சரவைக்குப் படு தோல்வி தந்து விட்டனர்!

இ. காங்கிரஸ் முதல்வர் மிச்ராவோ ''நான் தோற்கவே இல்லை. எதிராளிதான் அழுவுணி அடிக்கிறான்'' என்று பிடிவாதம் பிடித்துக் கொண்டிருக்கிறார்!




- 'மருந்துகள் கொல்கின்றன' என்ற தலைப்பில் டாக்டர் இ. எஸ். எஸ். ராமன் அவர்கள் எழுதியுள்ள நகைச்சுவை கலந்த கட்டுரையைப் படித்தேன். அவருக்கு என் பாராட்டுக்கள்.

கலிபோர்னியா யுனிவர்சிட்டியைச் சார்ந்த பார்மோகாலஜிஸ்ட் மில்டன் சில்வர்மேன் என்பவர், Prescription for death என்ற பெயரில் புத்தகம் எழுதியுள்ளார். மருந்து தயாரிப்பாளர்கள் மக்களை எப்படி ஏமாற்றுகின்றனர் குறிப்பாக புதிதாகச் சுதந்திரம் பெற்று அபிவிருத்தியடைந்து வரும் நாடுகளை எப்படித் தவறாகப் பயன்படுத்திக் கொள்கின்றனர் என்பதைப் பலவித ஆதாரங்களுடன் நிரூபித்துள்ளார். அமெரிக்கா மற்றும் ஐரோப்பிய நாடுகளில் தடை செய்யப்படும் மருந்துகள் சகஜமாக இந்த நாடுகளில் விற்கப்படுகின்றன. உதாரணத்துக்கு Entero-vio form' என்ற மாத்திரையைக்குறிப்பிட்டு: இது பத்துவருடங்களுக்கு முன்பே அமெரிக்காவில் தடை செய்யப்பட்டது. இதைச் சாப்பிட்டால் கடுமையான வயிற்று வலியும், மூளை பாதிப்பும், கண் பார்வை இழப்பும் ஏற்படும் என்கிறார். இப்படிப் பல மருந்துகளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். நமது சுகாதார அமைச்சர்கள் இந்த நூலைப் படித்துப் பார்த்து நடவடிக்கை எடுக்க வேண்டும்.

திருச்சி-18 — வி. ராதாகிருஷ்ணன்

- ''கலைஞரிடம் கேட்டோம்'' பேட்டிக் கட்டுரை படித்தேன். சுவையாகவும் சிந்திக்க வைப்பதாகவும் இருந்தது. ஆனால் கருணாநிதி அளித்த இரண்டு பதில்கள் மட்டும் (கேள்வி 2 (ஹிந்தி திணிப்பு) 10 (திராவிடர் கழகம்) திருப்திகரமாக இல்லை.

மதுரையில் கலைஞர் ''மேற்குடி மக்கள் தற்சமயம் 3 சதவிகிதத்தினர்தாம்; பாக்கி 97 சதவிகிதத்தினரை பூணூல் அணியச் செய்வதை விட 3 சதவிகிதத்தினர் பூணூலை எடுத்து விடலாமே!'' என்று பேசியிருக்கிறார்.

எப்படி இருக்கிறது நியாயம்?

97 சதவிகித மக்களை பூணூல் அணியுமாறு யார் கேட்டுக் கொண்டார்கள்? 3சத விகித மக்கள் (அவர் கூற்றுப்படி மேற்குடி மக்கள்) பூணூலை எடுத்து விடலாமென யோசனை கூற கலைஞர் யார்? 3 சத விகித மக்கள் பூணூல் அணிந்திருப்பதால் இவருடைய உடல் ஏன் அரிக்கிறது? மத சம்பந்தப்பட்ட இம்மாதிரிக் கேள்வியை வேறு மதத்தினரைப் பார்த்துக் கலைஞர் கேட்க முடியுமா?

தஞ்சாவூர்-1 — வி.எஸ். சுதர்சனம்

- விமான விபத்துக்களும், விமானக் கடத்தல்களும் நடைபெறும் நேரத்தில் 'விழுந்து நொறுங்கும் விமானங்கள்' பொருத்தமான தலையங்கமாகத் திகழ்ந்தது. அதில் கையாண்டுள்ள ஒப்புவமை பாராட்டுக்குரியது.

வடகாடு — கே.என். செல்வரத்தினம்

- தமிழகத்தில் கவனிக்க வேண்டிய பிரச்னைகள் ஏராளமாய் இருக்க, நீ தமிழனா? நான் தமிழனா? என்கிற தேவையற்ற, 'குழந்தை'த்தனமான ஆராய்ச்சியில் ஆளும் கட்சித் தலைவரும், எதிர்க் கட்சித் தலைவரும் இறங்கியிருப்பதைக் கார்ட்டூனில் அழகாய்ப் படம் பிடித்துக்காட்டியிருக்கிற ஓவியர் உமாபதிக்குப் பாராட்டுக்கள்!

செங்கவல்லி — இ. முருகவேள்.

- கல்கியை வாங்கியதும் வேகமாகப் புரட்டுகின்றன கைகள் விஞ்ஞானப் பக்கங்களைத் தேடி. அவ்வளவு சுவாரஸ்யம்!

கமுதி — பொன். ராஜ்குமார்

- 'வேஸ்ட், வேஸ்ட்' கட்டுரை வேஸ்ட் அல்ல. பழவந்தாங்கல் ரயில்வே மேம் பாலம் மிகவும் உயரம் என்பதுடன் மேலே கூரையும் இரவில் விளக்குகளும் இல்லாமல் உள்ளது.

சென்னை-61 — நேசன்

- அரசாங்கத்தை ஏமாற்றிவிட்டு டிக்கட் இல்லாமல் பயணம் (ரயிலில்) செய்து மாட்டிக்கொண்டு அபராதம் கட்டுபவர்களையும் காதலர்களைப் பிரித்து அவர்களை ஏமாற்றிக் காதலுக்குத் தடை போட்ட அதிகாரி கட்டிய அபராதத்தையும் பின்னிப் பிணைத்து வெகு அழகாக சிறுகதை எழுதிய பாமா கோபாலனின் 'அபராதம்' கதை அபாரம்.

சேப்பாக்கம் — எஸ். வி. ராஜசேகர்

- 'பானுமதி' அவர்கள் என் ஜோக்கின் தீவிர ரசிகையாக இருக்கலாம். அதற்காக நான் குங்குமத்தில் எழுதிய 'வி' ரோ 'பீரோ' ஜோக்கையே இந்த வாரம் கல்கியில் எழுதியிருப்பது எந்த விதத்தில் நியாயம்?

சென்னை-44 — ஏ. கே. சங்கர்

- அடடே... கெடுத்தீர்களே ஸார்! சிவகுமாரிடம் 'அகர வரிசை' பேட்டியை ஒரு வாரம் தள்ளிக் கண்டிருக்கக் கூடாதா? தன்னை முதன் முதலில் அறிமுகப்படுத்தி நாடறிந்த நடிகனாக்கிய அமரர் ஏ. வி. எம். அவர்களுக்கு வெகு சிறப்பான நினைவாஞ்சலி செலுத்தியிருப்பாரே!

600035 — சி. பூபால் சிங்

- திரு ஜே. எம். சாலி எழுதிய 'நோன்பு' சிறு கதையில் ''கஷ்டப்படுறவனைத் துரத்தறது தர்மம் இல்லே... அவன் கஷ்டத்தைப் புரிஞ்சுக்கிட்டுத் துடைக்கிறதுதான் தர்மம்'' என்ற வரிகள் அனைவரும் படித்துணர்ந்து அதன்படி நடக்க வேண்டிய பாடமாக அமைந்து விட்டது.

சென்னை-1 — நாகை ஜி. அஹமது

## உங்கள் பற்கள் பல்லாண்டு வாழ்க !

பினகா ஃப்ளோரைட் மூலம் உங்கள் பற்களின்
ஆயுளை நீடியுங்கள்.

பினகா ஃப்ளோரைட், மிகவும் சக்தி வாய்ந்த
ஃப்ளோரைட் கலவை கொண்டது. இது
உண்மையிலேயே பல்லின் எனாமலோடு கலந்து
பற்களைப் பலப்படுத்துகிறது.

வாழ்நாள் முழுக்க, சொத்தை விழுவதைத்
தடுத்துப் போரிட, இதன் பராமரிப்பு
சேவை இன்றியமையாதது.

தவறாமல் பினகா ஃப்ளோரைட்
கொண்டு பல் துலக்குங்கள். நீங்கள்
இதனை உபயோகிப்பதைப் பொறுத்து,
உங்கள் பற்களின் ஆயுள் நீடிக்கிறது.

பல்லுக்கு உறுதி

பற்சிதைவுக்கு எதிரி ...




# பினகா ஃப்ளோரைட்

**இந்தியாவின் முதன் முதல் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் பற்பசை**

ULKA-BF-3-81-TAM

# கவர்ச்சிகள்

கிருஷ்ணமணி



**19**

ஹில்டா ஜான்ஸன் தீவிரமாகச் சிந்திக்க ஆரம்பித்தாள். தன் எதிரில் அமர்ந்தவாறு ஆப்பின் பஜ்ஜியைச் சுவைத்துக் கொண்டிருந்த சுரேஷ் ஒன்றுமே ஆகாதது போல் ஒரு மோன நிலையில் உட்கார்ந்திருப்பது அவளுக்கு எரிச்சலூட்டியது. தன்னுடைய பலவீனத்தை அவன் எப்படியெல்லாம் உபயோகித்துக் கொண்டு விட்டான். தன்னுடைய முறைப் பையனை ஸ்டான்லியைத் தான் திருமணம் செய்து கொள்ள முடியாமல் போனதும், தன் தந்தை தனக்கு ஏற்பட்டுவிட்ட களங்கத்தை அறிந்தவுடன் சீறித் தன்னைக் கோபித்துக் கொண்டதும் அவள் நினைவிலாடின.

சர்ச்சில் மௌனப் பிரார்த்தனையின்போது சிலுவையின் முன்னால் மண்டியிட்டு, எல்லாருடைய பாவங்களையும் தன் தோளில் சுமந்து மனித குலத்தின் உய்விற்காக சர்வ பரித்தியாகம் செய்த இயேசு பிரானிடம் மானசீகமாகத் தன் பாவங்களுக்காக மன்னிப்புக் கோரியதை நினைத்துப் பார்த்தாள்.

முரளீதரன் அவளிடம் சொன்னது இப்போது விஸ்வரூபம் எடுத்து, ஆயிரம் குரல்களாய் அவள் செவிப் பறைகளில் ஒலிப்பது போலிருந்தது.

'ஹில்டா! நீங்க தப்பா நினைக்கல்லேன்னு நான் ஒன்று சொல்லுவேன். சுரேஷ் உங்களைக் கேவலம் தன் உடலிச்சையைப் பூர்த்தி செய்யற ஒரு சாதனமாகத்தான் உபயோகிச்சுக்கிட்டிருக்கான். நீங்களும் ஒரு மனிதப் பிறவி. உங்க மனசிலேயும் உணர்ச்சிகள் இருக்கு. உங்களுக்கும் வாழ்க்கைன்னு ஒண்ணு இருக்குங்கிறதை எப்படி நீங்க மறக்க முடியும்? சுரேஷோட செய்கைக்கு அவன் பொறுப்பேற்கணும். உங்களுக்கும் சமுதாயத்திலே ஒரு அந்தஸ்து ஏற்படணும்னா நீங்க உங்க வயத்திலே வளர்ந்துகிட்டு வர்றதாச் சொன்ன அவனோட குழந்தையைப் பெத்தெடுக்கணும். மாறாக நீங்க ஏற்கனவே ஒரு தடவை அவனோட பாவத்தினால உண்டான கருவைக் கலைச்சி அழிச்சது போல இப்பவும் செய்யாதீங்க. அது பாவம். பாவ புண்ணியம்கிறது எல்லா மதங்களிலேயும் ஒண்ணுதான் இருக்கு. அவனுடைய குழந்தைக்கு, அதனோட எதிர்காலத்துக்கு அவனைப் பொறுப்பேற்கும்படி செய்யணும். இல்லேன்னா, அவன் இன்னும் சிறிது காலத்துக்குள்ளே உங்களைத் தன் பார்வையினின்றும், ஏன் தன் பாதையிலிருந்துமே விலக்கி விடுவான். இப்போ நீங்க எடுக்கப்போற தீர்மானம்தான் உங்க எதிர்கால வாழ்க்கையைப் பத்தி தீர்மானிக்கப் போறது. நீங்க அவனை லவ் பண்ணினீங்க. அவன் திருமணம் ஆகாதவன் போல் உங்க கிட்டே நடிச்சு, உங்களை ஏமாத்தியிருக்கான். ஒரு தடவை ஏமாந்தீங்க. ரெண்டு தடவை ஏமாத்தப்பட்டீங்க. இந்தத் தடவையும் நீங்க அவனோட பேச்சைக் கேட்டு நடந்தா, அதாவது உங்க வயத்திலே வளர்ந்திட்டு வர்ற கருவை அபார்ஷன் செஞ்சு அழிச்சா, இத்தோட உங்க வாழ்க்கை முடிஞ்சிதுன்னு நினைக்கக்கிங்க. தீர்மானமா, மனிதப் பிறவியா வாழ்றதா, இல்லே நடைப்பிணமா உலவறதாங்கிறதைப் பத்தி முடிவு எடுத்திடுங்க!'....

எவ்வளவு பெரிய உண்மை! நினைத்துப் பார்க்கும்போதே உடல் சிலிர்க்கிறது. தன்னை மனம் போன போக்கில் அநுபவிக்க விரும்பும், அநுபவித்த அவனையே பார்த்தாள். இப்போது அவளுக்கு சுரேஷின்மீது ஆத்திரமாக வந்தது. ஆத்திரப்படக் கூடாது. கவனமாகக் காரியத்தை முடிக்க வேண்டும். கர்த்த

ரான யேசுபிரான்தான் முரளியின் மூலம் தனக்கு எச்சரிக்கை விடுத்திருக்கிறார். சிசுவைக் கொல்வது மகா பாவம்! அவளுடைய உள் மனப் போராட்டம் முகத்தில் மாறுதலைத் தோற்றுவித்தது.

"என்ன டியர்! பேசாமலே இருக்கே! மெடிகல் செக் அப் செஞ்சிக்கிட்டியா?"

"உம்!"

"என்ன சொல்றாங்க லேடி டாக்டர்?"

"நான் கருத்தரிச்சிருக்கேன்னுங்க!"

"ஹ ஹா....!" சுரேஷ் சிரித்தான். "ரெண்டு ஊசியைப் போட்டு அதைக் கலைச்சிட வேண்டியதுதானே? பிள்ளையைப்



பெத்துக்கிட்டா, உன் மேனி அழகு குறைஞ்சு போயிடாதா? கட்டுத் தளர்ந்து போயிடாதா? வேண்டாம் டியர்! நீ குழந்தை பெறக்கூடாது! இரேஸ் இட்!"

அவள் பேசவில்லை.

மாறாக அவள் கண்களில் ஒரு தீவிரம் பரவியது. சில விநாடிகளில் குபுக்கென்று நீர்த் திரையிட்டது. விழிகளின் விளிம்பில் கண்ணீர் முத்து முத்தாய்க் கோத்து நின்று. கன்னங்களில் வழிந்தோடியது. மௌனமாக அவள் அழ ஆரம்பித்தாள்.

இதைச் சற்றும் எதிர்பார்க்காதவன்போல் சுரேஷ் திடுக்கிட்டான். தில்டாவுடன் அவன் தொடர்பேற்படுத்திக் கொண்ட

கடந்த மூன்றாண்டுகளில் அவள் அழுதே அவன் பார்த்ததில்லை. எதையும் ஒரு விளையாட்டுப் போக்கிலேயே எடுத்துக் கொள்ளும் வழக்க முடையவள். இன்று சீரியஸாக இருக்கிறாள். இவளைச் சமாதானம் செய்ய வேண் டும். இல்லாவிட்டால் காரியம் கெட்டு விடும். விஷயம் விபரீதமாகப் போகாமல் தடுத்து விட வேண்டும்.

'ஹில்டா டியர்! இப்ப நான் என்ன சொல்லிட்டேன்? நீ வருத்தப்பட்டு அழ வேண்டியதில்லே. உனக்கு நான் என்ன குறை வச்சிருக்கேன்? கம்பெனிலே சம்பளமா ஐநூறு ரூபாய் கிடைக்குது. மாதா மாதம் நான் தனியா ஐநூறு தரேன். நீ கேட்டதெல்லாம் வாங்கித் தரேன். எங்க அப்பா, அம்மா, என் பெண்சாதி இவங்களெல்லாம் என்ன நினைச்சிக்கிட்டாலும் பரவாயில்லேன்னு எல்லாத்தையும் பொருட்படுத்தாம உன்னோட இருக்கேன். நீ எதுக்காக வருத்தப்படறேன்னு தான் புரியல்லே!''

''ரெண்டாவது தடவையா கருத் தரிச்சிருக்கேன். ஆனால் உங்களுக்கு இதிலே சந்தோஷமில்லே. உங்க குழந்தையை நீங்களே அழிக்கச் சொல்றீங்க. இது நியாயமா? எனக்கும் ஒரு தாயாகணும்கிற ஆசை இருக்காதா?''

''நியாயமான ஆசைதான்! ஆனா அது எவ்வளவு சங்கடங்களை உண்டாக்கிடும்னு யோசனை செய்து பார்த்தியா? முதல் மனைவி உயிரோடு இருக்கும்போது நான் இரண்டாந் தாரமாக உன்னை மணக்க முடியாது. திருமணமாகாத ஒரு பெண் குழந்தை பெத்துக்கிட்டா சொஸைட்டி என்ன சொல்லும்? நானு விஷயங்களையும் யோசனை பண்ணணும். உன் மனசை நோக அடிக்க எனக்குப் பிடிக்கலே. நீ சந்தோஷமா இருக்கணும். அதுக்காக நான் எதையும் செய்வேன்!''

''சொஸைட்டிக்குப் பயந்துதான் நாம இதுவரைக்கும் நடந்துக்கிட்டோமா? இது வரைக்கும் நம்ம ரெண்டு பேருக்கும் இருந்துக்கிட்டிருக்கிற உறவை சொஸைட்டி அங்கீகாரம் செய்யுமா? இப்போ நான் தாயாகி இருக்கேன்னு சொன்னவுடனேயே உங்களுக்கு அதிர்ச்சியா இருக்குது. அதனாலே உங்க ஸைடுக்கு சொஸைட்டியைத் துணைக்குச் சேர்த்துக்கிறீங்க. ஐ டோண்ட் கேர் அபௌட் தி சொஸைட்டி. எனக்கு என் வாழ்க்கைதான் முக்கியம். என் குழந்தை தான் முக்கியம்....!''

''இப்ப என்ன செய்யப் போறதா உத்தேசம்?'' அவன் குரலில் உஷ்ணம் ஏறியது.

''நான் அபார்ஷன் செஞ்சுக்க முடியாது. ஐ வில் ஃபேஸ் ரியாலிடி. என் குழந்தையைக் காப்பாத்த என்னாலே முடியும்.''

''தகப்பன் பேரு என்னன்னு கேட்டா என்ன சொல்லும்?''

''சுரேஷ்னு சொல்லும்.''

''ஹில்டா!'' ஹோட்டல் சிப்பந்திகள் அவனுடைய உரத்த குரலைக் கேட்டுத் திரும்பினர். தான் தவறு செய்துவிட்டது போல் உணர்ந்தான். குரலைத் தாழ்த்திப் பேசினான்.

''லுக் டியர் ஹில்டா! உனக்குப் பணம் நான் எவ்வளவு வேணும்னாலும் தரேன். ஐந்தாயிரமோ இல்லே பத்தாயிரமோ வாங்கிக்க. ஆனால் ப்ளீஸ் இதைக் கலைச்சிடு.''

''நோ! நோ! நோ!... இம்பாஸிபிள். என் குழந்தையோட விலை பத்தாயிரம் இல்லே. இது இரண்டு உள்ளங்களின் அன்புப் பிணைப்பாலே ஏற்பட்டது. அதை நான் சாகடிக்க மாட்டேன். அது ஆணாகப் பிறந்தாலும் சரி, இல்லே என்னைப் போல பாவப்பட்ட பெண் ஜன்மமா இருந்தாலும் சரி, தகப்பன் யார்னு சொல்லிட்டுத்தான் வளர்ப்பேன். சொஸைட்டியிலே அதையும் ஒரு பெரிய மனுஷனா வளர்ப்பேன். பிகாஸ் இன் சைல்ட் ஃபாதர் இஸ் எ பிக் மேன்.

## இப்படிச் செய்யலாமா?

சென்னை, குறளகம் அருகிலுள்ள ஐஸ் கிரீம் ஸ்டாலில் நுழைந்து ஐஸ்கிரீம் சாப்பிடுவதற்காக டோக்கனும் வாங்கி பன்னிரண்டாவது நபராக நின்று கொண்டிருந்தேன். ஐஸ்கிரீம் தயாரிக்கும் இரண்டு மிஷின்களில் ஒன்று ஏனோ அப்பொழுது வேலை செய்யவில்லை. மற்றொன்றில் ஐஸ்கிரீம் தயாரிக்க குறைந்த பட்சம் பத்து நிமிடமாகிக் கொண்டிருந்தது. எனக்குப் பின்னும் மேலும், மேலும் கூட்டம் சேர்ந்து கொண்டிருக்க வெயிலின் கொடுமையால் நாக்கும் வறண்டு கொண்டிருக்க ஐஸ்கிரீம் எப்பொழுது கிடைக்கும் என்று ஆவலோடு காத்துக் கொண்டிருக்கும் பொழுது காக்கிச் சட்டையணிந்த குறளகத்து ஆபீஸ் பியூன் ஒருவர் தன் கையில் கொண்டு வந்திருந்த பிளாஸ்கைத் திறந்து பெருமளவு 'ஐஸ்கிரீமை' எடுத்துச் சென்றார். விசாரிக்கும்பொழுது அது ஆபிஸருக்காக எடுத்துச் செல்லுவதாகக் குறிப்பிட்டுச் சொன்னார்கள். காசு கொடுத்து டோக்கன் வாங்கிப் பலர் தாகத்தோடு காத்து நிற்க ஓசியில் அவர்கள் எடுத்துக் கொள்வது மட்டுமல்ல இன்னும் கால் மணி நேரம் நாங்கள் காத்திருக்க வேண்டியதாயிற்று. எங்களுக்கு ஐஸ்கிரீம் கிடைக்க! — நடாரமணி





# குழந்தைக்கு மிகவும் சிறந்தது தாய்ப்பால்.

முலைப்பால் குழந்தைக்கு மிகவும் சிறந்தது—ஏன்?

தூய்மையானது, கிருமிகளற்றது, குழந்தையின் ஜீரண முறைக்கு நூற்றுக்கு நூறு உகந்தது—தாய்ப்பால். பலவித நோய்களையும் எதிர்க்கும் சக்தியை அளிக்கிறது தாய்ப்பால். குழந்தைக்கு அன்பான உணர்வும் பாதுகாப்பும் கிடைக்க உதவுகிறது. தாய்ப்பால் குடிக்கும் குழந்தைக்கு வாய்வு நோய்கள், சரும நோய்கள் ஏற்படுவது மிகவும் அரிது.

3 மாதம் ஆனபின், டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்கிறார்கள் குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப்பட்டது—ஃபாரெக்ஸ். இதில் புரதம், கார்போஹைட்ரேட், கொழுப்பு, கால்ஷியம், பாஸ்பரஸ் வைட்டமின்கள் உள்ளன. இரும்புச் சத்தும் ஏராளம் அடங்கியது—ஃபாரெக்ஸ். ஆகவே, குழந்தையின் முழு வளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு—ஃபாரெக்ஸ்.




**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்**

**குழந்தையின் விரைந்த முழு வளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

இதனோட தாத்தா ஒரு பெரிய புள்ளி. மிஸ்டர் ராம் நாராயணன்னு பேரக் குழந்தையின் லிலே பல லட்சம் ரூபாய் பெறுமானமுள்ளது. இட் இஸ் மோர்—தென் மை லைஃப்!''

''ஓஹோ! உனக்கு என் ஆஸ்தியிலே பங்கு வேணும்னு இப்படிச் செய்யப் போறியா? சட்டப்படி மனைவியாகாத ஒருத்தி தன் குழந்தையின் தகப்பனிடத்திலேருந்து எதையுமே பெற முடியாது தெரியுமா?''

''சுரேஷ்! ஸ்டாப் இட்! உங்களுக்கும் உங்க தகப்பனுருக்கும் எல்லாமே ரூபா பைசாதான். உங்க பணத்துக்காக நான் என்னை உங்களுக்குத் தரல்லே. அப்படித் தந்ததாச் சொல்லி என்னையும் உடலை விற்கிற வேசியா ஆக்கிடாதீங்க. ஐ லைக் யூ. ஐ லவ்ட் யூ! மனசார உங்களை நேசிச்சேன். உங்க சந்தோஷம்தான் என் சந்தோஷம்னு நெனைச்சேன். கேவலம் பணத்துக்காக இல்லே!''

''என் சந்தோஷம்தான் உன்னுடைய சந்தோஷம்னு இந்தச் சனியனைத் தொலைச்சுத் தலை முழுக வேண்டியதுதானே?''

''நோ! அதை ஏன் இட்டறீங்க. என் எதிர்கால இன்பக் கனவாக, என் வாழ்க்கைக்கு ஓர் ஊன்றுகோலாக அது இருக்கும். இன்னும் சிறிது காலத்தில் நான் உங்களுக்குச் சலிப்பூட்டக் கூடியவளா ஆயிடலாம். ஆனால் எனக்கு வாழணும்கிறதுக்கு ஒரு பிடிப்பு தேவைப்படுது. வாழ்க்கையிலே ஒரு பர்பஸ் இருக்கணும். இனிமே இந்தக் குழந்தைக்காக வாழணும்ங்கற ஓர் இலட்சியம் ஏற்பட்டுப் போச்சு. நீங்க என்ன சொன்னாலும் நான் கருவைக் கலைக்க மாட்டேன்.''

ஆபீஸுக்கும் கர்ப்பிணிக் கோலத்திலே வருவியா? அசிங்கமா இருக்குமே!''

''பெண்மையின் பூரணத்துவத்தை அசிங்கம்னு சொன்னா உங்க தாய் உங்களைப் பெத்திருக்க மாட்டாங்க. சிருஷ்டியே ஸ்தம்பிச்சுப் போயிடும். எது அழகு எது அசிங்கம்கிறது கூட நம்ம மனசோட நிலையைத்தான் காட்டறது. பொய் பேசறது அசிங்கம். பாவம் செய்யறது அசிங்கம். திருடறது அசிங்கம். தெய்வ நிந்தனை செய்யறது அசிங்கம். சோம்பேறித்தனமா இருக்கிறது அசிங்கம். தாயாக இருக்கிறது புனிதம். நீங்க பேசாதீங்க. போயிருங்க. வேணும்னா நான் வேலையை ராஜினாமா செஞ்சிடறேன். உங்க எதிரிலேயே வராமல் இருக்கேன். உங்களுடைய ஆஸ்தியும் அந்தஸ்தும் நீங்க முறைப்படி கட்டிக்கிட்ட மனைவியோட குழந்தைகளுக்கே போய்ச் சேரட்டும். என் குழந்தையை எப்படி முன்னுக்குக் கொண்டு வரணும்கிறது எனக்குத் தெரியும். கடவுள் நிச்சயம் எங்க ரெண்டு பேரையும் காப்பாத்துவார். ஏன்னா எல்லாத்தையும் பார்த்துக்கிட்டிருக்கிற அவருக்கு எது சத்தியம், எது பொய்யின்னு தெரியும். நான் செய்த தவறுக்காக வருந்துகிறேன். ஆனால் மேலும் தவறு செய்ய நான் தயாரா இல்லே. என்ன நேர்ந்தாலும் அதை எதிர்கொண்டு வாழற முடிவுக்கு வந்திட்டேன்!'' என்றாள். அவளுக்கு மூச்சு வாங்கியது.

தான் அவள் எதிரில் ஒரு சிறு புழுவைப் போன்று ஆகிவிட்டதைப் போல சுரேஷ் உணர்ந்து சிலையாகி நின்றான். (தொடரும்)

சென்னை கோட்டை அலுவலகத்தில் மந்திரிகளைச் சந்திக்க விரும்பும் பொதுமக்கள் முதலில் வரவேற்பு அதிகாரியிடம் விஷயத்தைச் சொல்லி அனுமதிச் சீட்டுப் பெற்றுக் கொண்ட பின்னர்தான், மந்திரியைச் சந்திக்க முடியும். குறைந்தபட்சம் ஐம்பதிலிருந்து நூறு பேர்கள் நிச்சயம் அந்த வரவேற்பாளர் அறையின் முன்பு நின்று கொண்டிருப்பதைத் தினமும் பார்க்கலாம். அவர்கள் நிற்பதற்கு நிழல் தரும் ஒரே ஒரு மரத்தைத் தவிர வேறு ஏதும் இல்லை. வருபவர்கள் உட்கார வசதியுடன் ஒரு சின்ன 'ஷெட்' போட்டுக் கொடுக்கக் கூடாதா?

— குடாரமணி





## அச்சாகு முன்பே தடை செய்யப்பட்ட புத்தகம்!

இது வீரசாவர்கார் நூற்றாண்டு. இவர் மராட்டிய மாநிலத்தில் 1882ம் ஆண்டு தோன்றியவர். அதே ஆண்டில் தோன்றிய பாரதியைப் போல் 'எரிமலை' என்னும் அமர காவியம் இயற்றினார். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அது அச்சாகுமுன்பே தடை செய்தது. பாரதி நூல்களைக் கூட புத்தகமாகி விற்பனைக்கு வந்த பிறகுதான் தடை செய்தது. உலகில் வேறெந்த புத்தகத்துக்கும் இத்தகைய தனிப் பெருமை இல்லை. அப்படி என்ன இருக்கிறது அதில்? ஆங்கிலேயர் 'சிப்பாய் கலகம்' என்று கேவலமாகப் பெயரிட்டு அழைத்த இந்தியர்களின் முதல் சுதந்திரப் போரைப் பற்றிய கதை இது. இதன் தமிழாக்கமாகிய 'எரிமலை'யை ''கலைமகள்'' பதிப்பித்தது.

- வைரவன்



# விடிவதற்குள் வா

ஆகஸ்டு 1ம் ஆண்டுமலரி

ஆரம்பம்

## சுஜாதா

# அன்புக்கு அடிமைகள்

கருணாமணாளன்

பூவும் பிஞ்சுமாகச் மின்னும் பகுதியை முருங்கை மரத்தில் தவிர்த்துவிட்டு, தொரட்டிக் கம்பால் பூக்காத, காய்க்காத கம்புகளில் துளிர்த்துள்ள முருங்கைக் கீரையைச் சடக் சடக்கென்று ஒடித்துப் போட்டாள் பர்வீன் பானு. கீழே விழும் கீரைக் காம்புகளைப் பர்வீன் பானு பிரியமாக வளர்க்கும் செவலை ஆடு தன் குட்டிகளுடன் வேக வேகமாகச் சுவைத்துக் கொண்டிருந்தது. அருகில் பீர்க்கும், புடலையும் பிஞ்சு பிடித்து மஞ்சளும், வெள்ளையுமாகப் பூக்களைச்சொரிந்து கொண்டிருந்தன. அந்தப் படலுக்குப் பலத்த தடுப்பு அமைத்து இருந்ததால் பர்வீனின் ஆட்டுக் கிடைகள் அங்கே செல்லவில்லையோ, அவை தப்பிற்றே!

கொல்லைப்புறம் செல்லும் கழிவு நீரில் ஒரு சிறிய கிச்சன் கார்டன் அமைத்திருந்தாள் பர்வீன் பானு. இந்தச் சிறிய கிச்சன் கார்டனைச் கசாப்பு வியாபாரம் செய்து வரும் தன் தந்தையின் ஆட்டுக் கூட்டத்திலிருந்தும் மிக மிக கவனமாகப் பாதுகாத்து வந்தாள்.

''முருங்கக் காய் கிடைக்குமா பானு?''

நிமிர்ந்தாள் பர்வீன் பானு.

ஆயிஷா.

''முஷ்டாக் அலி ஹாஸ்டலிலிருந்து வந்திருக்கான். இன்று தலை வெள்ளியாச்சே. மீன், கருவாடு ஒண்ணும் வராது. வீட்லே முட்டை இருக்கு. அதுகூடப் போட்டு ஆக்கத் தான் முருங்கைக் காய் கேட்டேன்.''

''மச்சான் வந்துட்டாங்களா! இருங்க. உச்சாணிக் கிளையிலே அஞ்சாறு காய் கெடக்குது. எனக்கு எட்டலே. நான் உள்ளே போயிடறேன். மச்சானை வந்து பறிக்கச் சொல்லுங்க.''

கட்டம் போட்ட கலர் லுங்கியும், கட் பனியனுமாகப் பின் பக்கத்து தொண்டு வழியாக நுழைந்து வந்த முஷ்டாக் அலியை ஜன்னல் மறைவிலிருந்து பார்வையால் விழுங்கிக்கொண்டிருந்த பர்வீன் பானு வியந்து போனாள். தொரட்டிக் கம்பை ஒற்றைக் கையால் உயர்த்தி இரண்டே ஒடிப்பில் காம்பின் நுனிகூட ஒடியாமல் அலக்காகப் பறித்ததில் ஐந்தாறு முருங்கைக்காய்களைக் கொண்ட கொத்து பொத்தென்று கீழே விழுந்து சிதறியது.

தற்செயலாக பர்வீனின் பார்வை ஆட்டின் மீது தாவியது.

அவ்வளவுதான்!

முதலாவது ஆடும் அதைத் தொடர்ந்து குட்டிகளும் முஷ்டாக் அலி வந்த தொண்டு வழியாக கிச்சன் கார்டனுக்குள் நுழைந்து தண்ணீர் பாம்பு மாதிரி தொங்கிக்கொண்டிருந்த புடலைப் பிஞ்சை ரசித்துச் சுவைத்தது. தொடர்ந்து குட்டிகளும் தாய் எவ் வழியோ அவ்வழியை இம்மியளவும் பிசகாமல் பீர்க்கங் கொடியைப் பதம் பார்ப்பதில் ஈடுபட்டிருந்தன.

''மாமீ மாமீ, தோட்டம் போச்சி!'' ஜன்னல் மறைவிலிருந்து குரல் கொடுத்தாள். முஷ்டாக் அலி கவனிக்கட்டும் என்று.

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்த முஷ்டாக் அலி, ''அட, ஆடும் குட்டிகளும்! எங்குள்ள சனியன்கள் இதுகள்! காலே ஒடிக்கிறேன்'' என்று கூறிக் கொண்டே அருகில் கிடந்த செங்கல்லை எடுத்தான்.

''மாமீ மாமீ... இதுங்க எங்க ஆடுங்க...''

''என்னளா, ஆடு கீடுன்னு சத்தம் போட்டுட்டு...'' என்று கேட்டபடி கசாப்புக் காரர் காதர் மீரான் வளைவுப் பக்கமாக வந்தார்.

''வாப்பா, வாப்பா! நம்ம ஆடும் குட்டிகளும் தோட்டத்துக்குள்ளே புகுந்துட்டுது. போய்ப் பத்துங்க வாப்பா... முஷ்டாக் மச்சான் முருங்கக் காய் பிய்க்க வந்தாங்களா... உள்ளே பூந்துடுச்சி!''

''ஓ.... அப்படியா சங்கதி... மருமகப் புள்ளே எப்போ வந்துச்சி, வாங்க மருமகப் புள்ளே... எப்போ வந்தாப்லே ''

''காலேலேதான் மாமா வந்தேன். அம்மா முருங்கக் காய் பறிக்கச் சொன்னாங்க... உங்க ஆடுகளா இதுக... சேச்சே நெறைய பிஞ்சுகளை நாசமாக்கிட்டுதே...!''

''தேதே... ஹைஹை...!'' காதர் மீரான் விரட்டவும் அவை ஓடிவிட்டன.

''வரேன் மாமா! மாமி இல்லையா? சொல்லிடுங்கோ'' மத்தளக் கம்பு போன்று திரண்டிருந்த அந்த யாழ்ப்பாணத்து முருங்கைக் காய்கள் ஒரு கைக்குள் அடங்காததால் இரண்டு கைகளால் பற்றியபடி செல்லும் போது முஷ்டாக்கின் டர்க்கி டவல் ஒரு பக்கமாகச் சரிந்தது. புஜத்திலும் மார்பிலும் மண்டியிருந்த கருண்ட ரோமங்கள் முஷ்டாக் அலிக்கு ஒரு தனிச் சோபையைத் தந்தது.

முஷ்டாக்கின் வருகை ஒருவகையில் மகிழ்ச்சியைத் தந்தபோதிலும் தன் கண்களைப் போலக் காத்து வளர்த்து வந்த தோட்டத்தை ஆடும் குட்டிகளும் நாசப்படுத்தி விட்டதில் பர்வீன் பானுவுக்குச் சிறிது வருத்தம்தான்.

முஷ்டாக் அலி போய்விட்டான்.

அவனுடைய நினைவு இன்னும் முற்றுகக் கரையவில்லை பர்வீன் பானுவுக்கு.

கிண்டி பொறி இயல் கல்லூரியில் இறுதி ஆண்டு படிக்கும் மச்சான் இந்த ஐந்தாறு வருட காலங்களில் எப்படி மாறிவிட்டார்?

''காதரு, ஒம்மருமவனுக்குக் குமாரபுரத்துலேருந்து பெண் பேசி வருது... இஞ்சினீர் மாப்பிள்ளைதான் வேணுமாம். அம்பதாயிரம் ரொக்கம் தருவாகளாம்... நூறு பவுனுக்கு நகை போடுவாங்களாம்.''

''அதுக்கென்ன இப்போ மருமகப்புள்ளே இன்னும் படிச்சே முடிக்கல்லியே... ஆயு சோடு படிச்சு முடிச்சப்புறம்தானே பாக்கணும்.''

''அதுக்கில்லேப்பா அவனுக்கு இருக்கிற கிராக்கியைச் சொல்றேன். ஏன்னா, உன் கிட்டேயும் முறைப் பொண்ணு இருக்கு... குமாரபுரத்துக்காரங்க செய்யற மாதிரி நீயே செஞ்சிடறேன்னு சொல்லிட்டா எதுக்கு இந்த கிறிஸ்தியாநகரத்திலேருந்து அத்தனை தூரம் போகணும்''

''இந்தக் கசாப்புக்காரன் கிட்டே அவ்வளவு துட்டுக்கும் நகைக்கும் எங்கே போவட்டும்? நமக்குள்ளே வேணும் வினையும்னுதான் பொண் குட்டி கதை பேசணும்! அதுக்காக நானும் எம்மவனைச் சும்மா கட்டிக்



டுங்கன்னு சொல்ல முடியுமா? என்னுலே ஏண்டதைப் பண்ணத்தான் செய்வேன்.''

''அதைத்தான் சொல்வேன்...''

''ஐஸாவாத்தா, அததுக்கு நேரங் காலம் வரவேணுமா? மருமவப் புள்ளேக்கு இந்த வருஷத்தோட படிப்பு முடிஞ்சிடும். அப்புறம் ஒரு உத்தியோகம் கிடைக்கணும். அதுக்குப் பொறவுதானே கல்யாணம்... அதுக்கு ஏன் இப்பவே நாம ரெண்டு பேரும் முட்டிக்கொள்ளணும்?''

''நாம பேசிப்போட்டுட்டா அக்கம் பக்கத்திலேர்ந்து வராது பாரு! அதுக்காகத் தான்!''

''வந்தாத்தான் என்ன ஐஸாவாத்தா? எங்ககிட்டே சொந்தத்திலேயே பெண் இருக்குன்னு சொல்லிட வேண்டியதுதானே! கெணத்துத்தண்ணியெ வெள்ளமாகொண்டு போயிடும்''

''என்ன ரெண்டு பேரும் கெணத்துத் தண்ணியப் பத்திப் பேசுறப்ல இருக்கு?'' பாய் முடைந்து கொண்டே கேட்டாள்காதர் மீரானின் சகதர்மிணி சகர்பான் நாச்சியார். தொடர்ந்து, ''கெணத்துத் தண்ணியை வெள்ளம் கொண்டு போகாது... அடுத்தாப்லே இன்னொரு கெணறு தோண்டி மோட்டார் வச்சி தண்ணி அடிச்சா அவ்வளவுதான். பழைய கெணத்துத் தண்ணியைப் புதுக் கெணறு உறிஞ்சிடும்! காயா மொழியிலே இப்படி ஆகிஒருத்தருக் கொருத் தர்தகராறுயிடுச்சி...ஐஸா மச்சி சொல்றதும் நியாயம்தான். நமக்குள்ளே இன்னுது தான்னு பேசிப்புட்டா ரெண்டு பேருக்கும் நிம்மதி இல்லேயா?''

இந்தப் பேச்சு வார்த்தை நடந்த பிறகு இப்போதுதான் முஷ்டாக் அலி வந்திருக்கிறான்.

நீள நீளமான புடலங்காயும், ரசாயன உரத்தில் வேலிக் காளான் மாதிரி விளைந்திருந்த பீர்க்கங் காய்களையும் சுமக்க முடியாமல் சுமந்தபடி வீட்டுக்குள் நுழைந்த ஆயிஷாவைப் பார்த்து, ''என்ன ஐஸா மாமி... புடலங்காயும் பீர்க்கங் காயுமா வர்ரீங்க'' பர்வீன் பானு கேட்டாள்.

''உன் மச்சான்தான் சந்தையிலே வாங்கி வந்தான். உனக்குத் தரச் சொல்லி! நேத்துக் காலே அவனோட அஜாக்கிரதையாலே ஆடுங்க உங்க தோட்டத்துலே பூந்து புடலேப் பிஞ்சையும் பீர்க்கம் பிஞ்சையும் தின்னுட்டுதாமே... அதுக்காக இதுகளே வாங்கி வந்து தரச் சொன்னான்!'' ஆயிஷா சுமையை இறக்கி வைத்துவிட்டு ஆசுவாசப் பெருமூச்சு விட்டாள்.

'ம்மேம்மே!' கட்டிப் போட்டிருந்த ஆடு கத்தியது.

''பாத்தீங்களா மாமி, பிஞ்சைத் தின்ன ருசியிலே இப்போ காயையும் கேக்குது எங்க ஆடு... குடுத்திடட்டுமா?''

''சே, மோசமான ஆடு! பேசாம கசாப்புக்கு அனுப்பிடு.''

''அதான் மாமி நடக்காது! நான் பிரியமா வளர்க்கிறேனுக்கும்! பாத்தீங்களா ரெண்டுகுட்டிபோட்டிருக்கு...பத்து மாசமா வளக்குறேனுக்கும்....''

''சரிம்மா உன்னிஷ்டம். உங்கப்பனே எங்கே''

''கயத்தாறு சந்தைக்கு ஆடு பிடிக்கப் போயிருக்காங்க.''

''அப்படியா... நாளக்கி விருந்துக்கு வரச் சொன்னனே....''

''யாருக்கு மாமி?''

''எல்லாருக்கும்தான். ஒங்க வாப்பாவுக்கு வருஷ பாத்திகா ஓதணும்னு சொல்லிக்கிட்டிருந்தான்... முஷ்டாக் அலி கோழிக்கறி திங்க மாட்டான். கிடாக் கறிதான் தின்பான்னு சொன்னேன்... அதுக்கென்னவாத்தா நல்ல வளர்ப்புக் கெடாவாப் பாத்துப் புடிச்சிக்கிட்டு வர்ரேன்னு சொன்னுனே... இன்னும் வரல்லியா?''

''வாப்பா சொன்னுங்கன்னு எப்பிடியும் சாதிச்சிடுவாங்க... வந்துடுவாங்க... அட, வாப்பாவே வந்தாச்சு!''

''மாமியும் மருமகளும் அப்படி என்ன பேசிக்கிட்டு இருக்காப்ல?''

''இப்பத்தான் வர்றியா சந்தைலேந்து?''

''ஆமா... கெடாங்களுக்கு ரொம்பக் கிராக்கி... பேசிக்கிட்டிருங்க... நான் வர்றேன்'' வந்ததும் வராததுமாக மறுபடியும் புறப்பட்டுவிட்டார் காதர் மீரான். வழக்கமாகத் திறக்க வேண்டிய கசாப்புக்காரர் மஸ்தான் அன்றைக்குக் கடை திறக்காததால் மொத்தக் கூட்டமும் காதர் மீரான் கடையை மொய்த்து இருந்த கறிகள் அனைத்தையும் வாங்கியதுடன் மறு தினத்



# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!



**நைஸில்**
உபயோகிப்பீர்-
மிகத்துரித நிவாரணம்
அளிக்கும்
வியர்க்குரு
பவுடர்.



2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'




**வாங்குவீர் நைஸில்.
விரட்டுவீர்
வியர்க்குருவை.
பால்கம் பவுடரைவிட
குறைந்த விலையில்!**



மருந்துக் கலவையுள்ள நைஸில்:

1. அதிக வியர்வையைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

GN-79-PR-TM

தேவைக்காக வாங்கியிருந்த கடாக்களை அறுத்தும் ஐந்தாறு பேர்கள் ஏமாற்றத்துடன் கறி கிடைக்காமல் திரும்பினர்.

ஒருவாறு கடையைச் சாத்தும்போதுதான் வீட்டுக்கு பாத்திஹாவுக்குக் கறி எடுக்காதது நினைவு வந்தது.

இப்போது என்ன செய்வது?

பர்வீன் பானுவிடம் காதர் மீரான் ஓடோடி வந்தார்.

''பானும்மா, வருஷ பாத்திஹாவுக்குக் கறி எடுக்க மறந்துட்டேன். மருமகப் புள்ளையையும் சாப்பாட்டுக்குக் கூப்பிட்டு இருக்கேன்...இப்போ என்ன பண்ணலாம்?''

''நம்ம கிட்ட வேறே கிடா இல்லியா?''

''இருந்தா இதுவரை பொறுக்கவா போவுது''

''மஸ்தான் கிட்ட இருக்குமே...''

''அவன் கிடா கெடைக்காமத்தான் இன்னிக்குக் கடையே தெறக்கல்லே... ஒண்ணு செய்யலாமா?''

''என்ன வாப்பா...''

''உன்னோட செவலே ஆட்டை அறுத்திடலாமே....''

''வாப்பா! உங்களுக்கு வேறே யோசனையே அடைபடலியா? பாவம், பால் குடி குட்டியுள்ள ஆடு! குட்டி போட்டே ரெண்டு மாசம்தான் ஆவுது.''

''நெசந்தாம்மா...! நாளைக்கு உன்னைக் கட்டிக்கப் போற இன்ஜினீர் மாப்பிள்ளை... இப்பவே மாமா சொன்னபடி செய்யலியே நாளை எங்கே இருந்து நமக்குச் செய்யக் கூடிய விஷயங்களைச் செய்யப் போறார்னு தப்பாக் கணக்கெடுத்து ஒதுங்கிட்டா? அதனாலே கொஞ்சம் யோசனை பண்ணிப் பார் பானு!''

''அப்படியே ஆனாலும் ஆகட்டும்! அப்படிக்கிருந்தும் என்னோட ஆட்டு மேலே மட்டும் கத்தி வைக்கச் சம்மதிக்க மாட்டேனுக்கும்!'' ஆணித்தரமாகக் கூறினாள் பர்வீன் பானு.

''இப்படிப்பட்ட மாப்பிள்ளை நம்ம சுசாப்புக் குடும்பம் தேடி வருவாங்கன்னு நீ கனவிலும் நினைக்க முடியாது பானு!''

''எனக்குன்னு ஒருத்தர் இனிமேல்தான் பிறப்பார்னு இல்லே! எங்கேயாவது பிறந்துதான் இருப்பார்! அதற்காக அதைச் சொல்லி மட்டும் என்னோட மனசை மாத்திட முடியாதாக்கும்!''

''மாமா!''

''அடடே... மருமகப்புள்ளே... வாங்க, வாங்க!''

பர்வீன் பானு உள்பக்கம் ஓடி மறைந்தாள்.

''இத்தனை நேரமாக என்ன விவாதம்?''

''சும்மா... தெரியாதா....''

''அம்மா கிட்டே நேத்து எனக்கு நீங்க விருந்துக்குச் சொல்லி யிருந்தீங்களாம். இன்னிக்கு நான் அவசரமா தூத்துக்குடி வரை போயிட்டு வரணும்.. அதனாலே உங்க ஃபங்ஷனை இன்னொரு நாள் வச்சிக்கிடலாம்... இந்த மாதம் முடிவதற்குள் எப்பவாவது ஒரு நாள் வச்சிக்கிடலாம்!''

''அப்படியா... ஏற்பாடெல்லாம் பண்ணியாச்சே!''

''அதுக்கென்ன பரவாயில்லே. எனக்குத்தான் லீவு முடிய இன்னும் நாள் இருக்கே?''

தூத்துக்குடிக்குப் புறப்பட்ட பஸ்ஸில் இருந்த முஷ்டாக் அலியின் இதயம் பெருமிதத்தால் துள்ளியது. ஆம்! பர்வீன் பானுவின் ஆட்டைக் காப்பாற்றுவதற்காக — சொன்னதைச் சொன்னபடி செய்து முடிக்கும் முரட்டு சுபாவம் உள்ள காதர் மீரானின் திட்டத்தை முறியடிப்பதற்காகத் தூத்துக்குடிப் பயணத்தைக் காரணம் காட்டி நிறுத்திவிட்ட பெருமிதத்தில் முஷ்டாக் அலியின் நெஞ்சம் புளகம் அடைந்தது. அப்படி ஒரு பொய்க் காரணம் சொன்னதற்காகத் தூத்துக்குடி வரை சென்று வர வேண்டும் என்ற எண்ணத்துடன் பேருந்தில் வீற்றிருந்தான் முஷ்டாக் அலி!

# டூ-இன்-ஒன்



போர்ஹென்ஸ்
டபிள்–ஆக்ஷன்
டூத்ப்ரஷ் உங்கள்
பற்களை சுத்தம்
செய்யும்போதே
ஈறுகளையும்
தேய்த்துக்
கொடுக்கிறது.

பற்களை சுத்தம்
செய்யும்
உறுதியான
நீலக் குச்சங்கள்

ஈறுகளைத்
தேய்த்துக்
கொடுக்கும்
மென்மையான
வெள்ளைக்
குச்சங்கள்

**போர்ஹென்ஸ்**

டூ-இன்-ஒன்
டூத்ப்ரஷ்

அடல்ட்
மற்றும் ஜூனியர்

275 F-203 TAM

# அறிமுகங்கள் மூன்றும்!

**[இந்த இதழுடன் வேலையில்லாப் பட்ட தாரிகளின் அறிமுகங்கள் முடிவடைகின் றன. மலையளவு பிரச்னையில் கடுகளவேனும் உதவ முடிந்ததில் மகிழ்ச்சி]**

## பாதை தெரியுதா பார்!

''பெருமான் தாய்...! என் பாட்டியை அழைக்கிறேன் என்று எண்ணுகிறீர்கள்! என் பெயர்தான்!'' என்றி தமாஷாகத் தொடங் கும் இவருக்குப் ''போனால் போகிறது என்று பிரேமா என்ற பெயரையும் வைத்தார்கள்!''

தெரிந்தோ தெரியாமலோ கல்லூரிக்குள் நுழைந்து படிக்க, அவர்களும் ''நீ ஒரு பட்ட தாரி (பி.ஏ. ஆங்கில இலக்கியம்) உன் பொழுதை வீணே கழி'' என்று சொல்லி அனுப்பி விட்டார்கள்! இதன் பின் பெருமான் தாய் தமிழ், ஆங்கிலம் தட்டெழுத்தும் பயின்றார்.

''வேலையில் சேரும்போதே ஐந்தாண்டு அனுபவம் தேவை என்றால் என்னதான் செய் வது'' என்று அங்கலாய்க்கும் இவர், வாழ்க் கைப் பயணத்தைத்தொடங்கப் பாதை தெரி கிறதா, பார்த்துக் கொண்டிருக்கிறார்.

பெருமான்தாய் (வயது 23)
5, ஜெகதாஸன் தெரு, ராதாநகர்,
குரோம்பேட்டை, சென்னை-44

## தமிழை நம்பினேன், தவிப்பேனு!

'' 'எண்திசை நின்று வருவோர்க்கும் வாழ் வளிக்கும் தமிழ்' என்ற முழக்கத்தை நம்பி நான்காண்டு தமிழ் பயின்றேன்; சைதை ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியும் வரவேற்றது: பின்னர் முன்னே உள்ள புலவர் போதா தென்று பின்னே ஒரு வாலையும் (பி.லிட்.) பல்கலைக் கழகம் ஒட்டிக் கௌரவித்தது: மதுரை பல்கலைக் கழகத்தின் எம். ஏ. பயில் கின்றேன்'' என்று அடுக்கிக் கொண்டே போகும் சுவாமிநாதன். ''சந்திர சூரிய கிரகண தினங்களைக் கூட முன்கூட்டிக் கூறும் அறிஞர்கள் எனக்கு வேலை கிடைக்கப் போகும் நாளைப் பரிவுடன் உரைப்பார் களா?'' என்று ஏங்குகிறார்.

புலவர் எம். சுவாமிநாதன் (வயது 26)
15, தெற்கு வீதி
திருப்பனந்தாள்-612504.

## நடுப் பாலத்தில் நிற்கும் ரயில்!

''ரிப்பேரான ரயிலைப் போல நடுப் பாலத் தில் நிற்கிறேன்'' என்று வருந்தும் அபரா ஜிதன், பி. ஏ. சமூக இயல் படித்தவர். ''We will inform you latter ஐக் கேட்டுக் கேட்டு மீண்டும் மீண்டும் Return to Pavilion தான்'' என்று துயருடன் சொல்கிறார்.

அபராஜிதன்,
20, வியாசராயபுரம், மதுரை-625001.

## வாழ்க்கை நாடகம்

கல்லூரி நாட்களில் நாடகங்கள் நடத்திப் புகழ் பெற்ற பா. சந்திரசேகரன், ''அந்த அனுபவங்கள் பற்றிக் கதை கதையாகச் சொல்லலாம்'' என்கிறார். ஆனால் தன் சொந்த வாழ்க்கைக் கதை அர்த்தமுள்ளதாக அமைய ஒரு வேலையை எதிர்பார்க்கிறார், ஆங்கில இலக்கியத்தில் முதுகலைப் பட்டதாரியான இவர். கம்ப்யூட்டர் புரோகிராமிங் தேறி யுள்ள இவருக்கு ரிஸப்ஷனிஸ்ட்டாக சில மாதங்கள் பணியாற்றிய அனுபவமும் உண்டு.

பா. சந்திரசேகரன் (வயது 28)
87, விவேகானந்தா சாலை, ராம்நகர்,
கோயமுத்தூர்-641 009.



✕ அபராஜிதன்



✕ சந்திரசேகரன்



✕ சுவாமிநாதன்



✕ பெருமான் தாய்

# அரசியல்வாதி வீட்டு க















# ல்யாணம்

கருத்து: சந்திரமௌலி

















மத்தியானச்சாப்பாடு வேண்டா வெறுப்பாய் முடிந்தது. முன் அறைக்கு வருகையில் வாசல் வெயிலில் வறுபட்டுக் கொண்டிருந்தது. பாதையோர வேலி மரங்கள் சோம்பிக் கறுத்திருந்தன.

பூமா, கம்பிக் கதவுடன் சற்று நின்று வானத்தைப் பார்த்தாள். நீலம் கரைந்த சமுத்திரமாய் அலையில்லாமல் கிடந்தது. அந்த ஏகாந்தத்தை உணர்ந்த அவளுக்குத் தன் அம்மாவின் ஞாபகம் அந்தப் பிற்பகலின் வெயிலைப் போலத் தகிப்பாய்த் தீண்டியது.

"ஏண்டி பூமா, பேப்பர்காரன் வந்தா வாசல்ல போட்டுட்டுப் போறான். இந்தப் பனியிலே ஏன் கால் வலிக்கக்கழுத்துப் புடைக்க இருமிண்டு நிக்கணும்?"

"சித்த இரம்மா, பேப்பர் வந்தா தொட ஆரு விடறா? அப்பா, அண்ணா, அப்புறம் ரெண்டாவது வீட்டு வெங்கிட்டு சார், இண்ணைக்கு நான்தான் மொதல்ல படிக்கப் போறேன்" என்று ஒரு நாளல்ல, இரு நாளல்ல, ஒரு ஆறு மாசம் இப்படிக் காத்திருந்து முதலில் படித்ததன் உள் அர்த்தம், அதன் கிடக்கை எல்லாம் சட்டென்று பொறியாய்த் தூவிய வாணம் போல், இதேபோல

ஆனாலும் காலத்தின் வேகத்தில், பிரச்சினைகளின் பாரத்தில், மனிதர்களின் மாறும் சுபாவத்தில் அவளை மெல்ல மெல்ல மறந்துவிட்டனர். அவளுடைய அண்ணன்கள், அப்பா என்று இதயத்துக்கு நெருங்கியவர்கள் கூட மறக்கத் தொடங்கி விட்ட பின், ஒரே ஒரு ஆத்மா வாசலோடு போகிற வயசுப் பெண்களைப் பார்த்துப் பார்த்து நெஞ்சின் மென்மையான அறைகளில் பூட்டவும் முடியாமல் திறந்து வெளியே விடவும் முடியாமல் தவித்துத் தவித்து அதிலேயே உருக ஆரம்பித்தது.

"எம் பொண்ணை ஒரே ஒரு தரமாவது பார்க்கணுமே?" என்ற அரிப்பு அவளுக்கு.

அம்மா நெஞ்சைப் பிடித்துக் கொண்டு உள் ரேழிக்குப் போய்ப் படுத்துக்கொண்டாளாம்.

"என்னோட தாகத்தைச் சொல்லியாச்சு. தீர்க்கறதும், தீர்க்காததும் உங்க இஷ்டம்." என்று சொல்லிவிட்டுப் படுத்தவளுக்கு விடியவே இல்லை.

காலையில் பார்த்தபோது உடம்பு சில்லிட்டு முகத்தில் மட்டும் மாறாத புன்னகையுடன் அப்போதுதான் படுத்தவளாய்...

# ஓடிப்போனா

ஒரு மத்தியானத்தின் வெய்யில் படிந்த அக்ரஹாரத்தின் செம்மண் கோலங்கள் பதிந்த தெருக்களில் மெல்ல மெல்லப் பரவின.

"பேப்பர் போட்டுண்டிருந்தானே, அந்த எம். ஏ. படிச்ச பையன்? அவனோட பூமா ஓடிப்போயிட்டாளாம். லெட்டர் எழுதி வெச்சிட்டுப் போயிருக்கா!"

"போன மாதம்தான் பாங்கியில ஆபீசரா உத்தியோகம் கிடைச்சிருக்குன்னு சொல்லிண்டிருந்தானே... பேரு கூட விஷ்ணுவர்த்தன்...."

"சினிமா நடிகன் மாதிரி பேரு கூட கவர்ச்சியா இருக்கு."

"ஆளுக்கு மட்டும் என்னவாம்?"

"ம், எப்படியோ, மூணு பசங்கள்ல ஒண்ணும் உருப்படியா இல்லே. இவர் தாலுகா ஆபீஸ் உத்யோகத்தில எத்தனை நாள் குடும்பத்தைத்தாக்குப்பிடிச்சுண்டு இருக்கமுடியும்? பொண்ணு கல்யாணத்துக்கு ஒண்ணும் சேர்த்து வச்சிருக்கவும் சான்ஸ் இல்லே... பாத்தா, இனி ஜன்னல் கம்பியைப் புடிச்சிண்டு நிக்கறதினால பிரயோஜனம் இல்லே. பேசாம இப்படி ஓடிப் போயிடறது உத்தமம்னு.. ."

"மெட்ராஸா? இல்ல வேறெங்காவதா?"

"கோயம்புத்தூர்னு சொல்றா... மத்தியானம் பாசஞ்சர்லே ரெண்டு பேரும் ஏறியிருக்கா. பஸ் ஸ்டாண்டுலதான் பாதி நாள் கண்குத்திப் பாம்பாக் கெடந்து, யாரு டவுனுக்குப் போறா, என்ன வாங்கிண்டு வர்றான்னு பழியாக் கெடக்கே...."

வெங்கிட்டு சார்தான் டாக்ஸி பிடித்து அவள் கணவரின் அலுவலகம் வந்து அவரை அழைத்துக் கொண்டு இவளிடம் சமாசாரத்தைச் சொல்ல வந்தார்.

'அம்மா போன பின் என் ஹிருதயமே என்னை மறந்து விட்டாற் போல் உணர்கிறேன். உன்னால் அம்மா போனாள். அவளால் நான் போய்விடுவேன். இரண்டு வருஷமாய்க் கண்ணில் ஒளியில்லை. சாயந்திரமானா திண்ணையை விட்டு இறங்குவதில்லை. டாக்டர் ராமசுப்பு கை விரித்து விட்டான். ஆபரேஷன் பண்ணினால் ஓரளவுக்கு வெளிச்சம் கிடைக்கும். அதுவும் இங்கே பண்ண முடியாது. மதுரையோ, மதறாஸோதான். ஐயாயிரம் ஆகும் என்று சொல்லிவிட்டான். பணம்? உன் அண்ணன்கள் இப்போதுதான் தலையெடுத்திருக்கிறார்கள். ரெண்டாயிரம் சரிபண்ணலாம் என்கிறார்கள். இன்னோர் ஆயிரத்துக்கு வெங்கிட்டு சார் பொறுப்பு ஏற்றுக்கொண்டார். மீதிக்கு ... ஆனதாகட்டும். நீ உடம்பைக் கவனித்துக் கொள். குழந்தையைப் பார்க்க வேண்டும் போலிருக்கிறது. மாப்பிள்ளைக்கு என் அன்பு' என்று அப்பா சொல்லி, ஒரு அண்ணன் இடது பக்கம் சரித்துச் சரித்து எழுதிய இன்லண்ட் உறை சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது முன்னறையில் வந்து விழுந்தது. படித்ததும் சாப்பாடு பிடிக்கவில்லை. அப்பாவுக்குக் கிடைக்காத வெளிச்சமும் அம்மா இல்லாததால் சூழ்ந்த இருட்டும் மனசைக் கவ்வின.




கண்ணில் நீர் கோத்துக் கொள்ளப் பாதங்கள் தரையில் பாவாமல் தன்னையுமிழந்து உள் அறைக்குத் திரும்பினாள். குழந்தை வருண் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தான்.

ஜன்னல் பக்கமிருந்த மனோரஞ்சிதப் பூக்கள் காற்றில் சுகந்தத்தைக் கலந்து கொண்டிருந்தன. அந்தக் கலப்பில், சில விநாடிகள் வயப்பட்டபோது, இரும்பு கேட் திறக்கப்படும் ஒலி கேட்டது.

எழுந்து வெளியே வருகையில் அவள் கணவன்.

''ரொம்பச் சீக்கிரம் வந்தாச்சு?''

''தலைவலி பூமா.''

விஷ்ணுவர்த்தன் உள்ளே போய்ச் சட்டை கழற்றி, வேஷ்டி உடுத்தி, முகம் கழுவி வரும்போது அவள் காப்பியுடன் எதிரே வந்தாள்.

''உனக்குமா தலைவலி பூமா?''

''இல்லையே'' அவள் பலமாகத் தலையசைத்துச் சிரிக்க முயன்றாள்.

''பின்னே ஒன்னோட மொகம் வாடி இருக்கே?''

# மகள்

அவள் அந்த இன்லண்ட் உறையை எடுத்து வந்து நீட்டினாள்.

''படிக்கக் கஷ்டமாகத்தான் இருக்கு. அப்பாவைத்தான் இங்கே வந்து கொஞ்ச நாள் இருக்கச் சொல்லேன்?''

''அவர் வரணுமே?... இன்னும் என்மேல் கோபம் முழுக்கத் தீரலையே?... தீர்ந்திருந்தா உன்னாலே அம்மா போனாள். அவளாலே நான் போகப் போறேன்னு எழுதுவாரா? எங்கம்மா இப்படிப் போவான்னு தெரிஞ்சிருந்தா உங்களை ஏறிட்டுப் பார்த்தே இருக்க மாட்டேன். ஒரே பொண்ணுன்னு கண்ல வச்சு வளர்த்தா. ஒரு பாத்திரம் அலம்ப விட மாட்டா. ஒரு துணி தோய்க்க விடமாட்டா. கோயிலுக்குப் போனாக்கூட கவசம் போட்டாப் போல என்னை ஒட்டி ஒட்டி வருவா. நான் உங்க கூட வந்திருக்காட்டா அம்மா ரொம்ப நாள் இருந்திருப்பான்னு அவர் நெனைக்கிறார். அப்போ என்மேலே கோபம்வர்றது நியாயம்தானே?'' என்று பூமா சொல்லச் சொல்ல வார்த்தை உடைந்து பிசிறடைந்து அழுகையில் கலந்தன.

''இதென்ன பூமா... உலகத்துல இப்படிக் கல்யாணம் பண்ணிக்கிறதும் தன் பொண் இப்படிச் செய்துட்டாளேன்னு துக்கத்தில உசிரை விடறதும் ஏற்கனவே நடந்திருக்கு. ஆனா, அம்மாவுக்கு இந்த முடிவு தரணும்னு கல்யாணம் பண்ணிண்டோம்? இல்லையே... இந்த நெலைல அப்பாவுக்கு ஏதாவது உதவி

பண்ணுவோம். ஆபரேஷனுக்குப் பணம் தருவோம். அவர் விரும்பின நாமே இங்கே கூட்டி வந்து எல்லா சௌகரியம் செய்து கொடுத்து, முழுக் குணம் ஆகிறவரைக்கும் கவனிச்சுக்குவோம்.''

''உங்க மனசு இப்படி இருக்கு. அவர் மாப்பிள்ளை கிட்ட ஒரு பைசா வாங்கறது கூட அகௌரவம்னு நெனைக்கிறவர்....''

''இப்ப கௌரவத்தைப் பத்திப் பேச்சு வரலே. கண் குணமாகணும். இந்த ஞாயிறு உங்கப்பாவைப் பார்க்கப் போக லாமா? ஒரு லெட்டர் எழுதிடு. அவரை கன்வின்ஸ் பண்றது உன்னோட பொறுப்பு.''

''நான் சமாதானம் பண்ணி ஒத்துண் டார்னு என்னைப் போல சந்தோஷப்படறவ உலகத்தில யாரும் இல்லையே?''

''முயற்சி செய்வோம்'' என்றான் விஷ்ணு வர்த்தன்.

பூமாவுக்குத் தன் கணவனின் மனப் போக்கு மனசில் ஒளியேற்றியது.

ஸ்டேஷனில் இறங்கி வண்டி கிடைக் கிறதா என்று பார்வையைச் சுழற்றியபோது மூன்று அண்ணன்களும் வெளியே இருந்து ஓடிவந்தார்கள்.

''பூமா....''

## பாரதியின் பாஞ்சாலிக்குப் பதில்!

எந்த ஒரு ஆண்மகனும் குடும்பத்தில் இருக் கின்ற யாருக்காவது ஆபத்து வந்தால் அது தன்னைப் பாதித்த பிறகுதான் வீட்டுப் பெண் களைப் பாதிக்க விடுவான். உதாரணமாக திருடன் வீட்டிற்கு வந்தாலும், அல்லது வீட்டில் நெருப்பு பிடித்து எரிந்தாலும் முதலில் ஆண்மகன்தான் உதவவேண்டும். இது தான் ஆண் மகனுக்கு அழகு. ஆகவே தன்னை இழந்த பிறகுதான் தருமன் பாஞ்சாலியைச் சூதாட்டத்திற்குப் பண யம் வைத்து இழந்தான்.

புலவர் கீரன் சொற்பொழிவில் கேட்டவர்:
திசை முத்து



''அண்ணா லெட்டர் கிடைச்சதா?''

''கெடச்சுது கெடச்சுது... வாங்க அத்திம் பேர்... மத்தியானம் பதினொரு மணிக்கு வரவேண்டிய வண்டி இது. எழுபது நிமிஷம் லேட்டுன்னார் ஸ்டேஷன் மாஸ்டர். சரின்னு வீட்டுக்குப் போய் டைமுக்கு வந்தா இன் னும் அறுபது நிமிஷம் லேட்டுன்னார். இங்கே பூவரச மரத்தையும் தண்டவாள மணி யையும் பார்த்துண்டு எவ்வளவு நேரம் இருக்க முடியும்? போய்ட்டு வர்றதுக்குள் ளாற வண்டி வந்தாச்சு.. டேய் சூட் கேஸை எடுத்துக்க. பூமா, வருணை என்கிட்ட குடு.''

அக்ரஹாரம் மத்தியான வெய்யிலில் தூங் கிக்கொண்டிருந்தது. சந்நிதித் தெரு திரும்பி, அவளுடைய வீடு இருக்கும் தெரு நுழைந் ததும் அம்மாவின் ஞாபகம் ஊசி மருந்து போல உள் நுழைந்து இரத்த ஓட்டத்தில் கலந்து நாடி நரம்பெல்லாம் அதிர...

வெங்கிட்டு சார், அவளுடைய வீட்டு முன் நின்று கொண்டிருந்தார்.

வண்டி நின்றது.

''நாகேச்வரா, உம் பொண்ணும் மாப் பிள்ளையும் வந்தாச்சு... பூமா, வாம்மா... வாங்க ஸார்... மெல்ல இறங்குங்க... தலை இடிச்சுக்கப் போறது....''

அப்பா வேகமாக எழுந்து வந்தார்.

''இத்தனை நாழி இங்கதாம்மா இருந் தேன். நாக்கு வரள்துன்னு ஒரு வாய் தீர்த் தம் குடிக்கலாம்னு உள்ளே போனேன்... வாங்க மாப்பிள்ளை... வண்டி ரொம்ப லேட்டா வந்திருக்கே... வெங்கிட்டுதான் உன்னைப் பார்க்கணும் பார்க்கணும்னு துடிச் சிண்டு இருந்தான்மா... உன் லெட்டர் வந்த திலிருந்து இங்கேயே குடியிருந்திட்டான்.''

வெங்கிட்டு சார் அதை ஆமோதிப்பது போலச் சிரித்தார்.

சாப்பாட்டுக்குப் பின் அப்பா மகள் வந்த சந்தோஷத்தில் ரொம்ப உற்சாகமாய் இருந் தார். வருண், தாத்தாவுடன் கொஞ்ச நேரம் விளையாடிவிட்டுத் தூங்கிவிட்டான். வெங்கிட்டு சாரின் வீட்டிலிருந்து பெண்கள் எல்லாரும் வந்து பூமாவைப் பார்த்தார்கள். எதிர் வீட்டுச் சுந்தராம்பா வந்து, பூமாவின் அம்மா ஞாபகத்தை ஒரு கிளறு கிளறி விட்டுப் போனாள்.

சாயந்திரம் காப்பி நேரத்தில் பூமா வெங்கிட்டு சாரை வைத்துக் கொண்டு மெல் லப் பேச்சை ஆரம்பித்தாள்.

''ஏம்பா, உங்களைக் கையோடு கூட் டிண்டு போகணும்னு வந்திருக்கோம். டாக் டர் ராமசப்பு எழுதிக் கொடுத்த பிரிஸ் கிரிப்ஷன்ஸ் எல்லாம் எடுத்துண்டு வாங் கப்பா...''

நாகேச்வரன் விழித்துக் கொண்டார்.

''என்னம்மா சொல்றே? கஞ்ஜீட்டா தெளிவாச் சொல்லும்மா.''

> **ஒரு வருடப் பலனுக்கு நெல்லை நடுங்கள்.**
>
> **பத்து வருடப் பலனுக்கு மரங்களை நடுங்கள்.**
>
> **நூற்றாண்டு பலனுக்குக் கல்வியைக் கொடுங்கள்.**
>
> **-சீனப் பழமொழி**
> **•ரமா ராமநாதன்**

''தெளிவென்னப்பா... ஆபரேஷனை எங்க ஊர்ல செய்திடலாம். கோயமுத்தூர்ல இல்லாத டாக்டர்களா?''

''டாக்டர் இருப்பாங்க. ஆனா வசதி? லெட்டர்ல கூட எழுதியிருந்தேனே?''

''உங்களுக்கு எதுக்கப்பா கவலை நீங்க வந்தாப் போதும். குணப்படுத்தறது எங்க பொறுப்பு.''

நாகேச்வரன்வெங்கிட்டு சாரைப்பார்த்துச் சிரித்தார்.

''பார்த்தீரா? தெனீச்வரர் கோயில் கல்தூணாட்டம் மூணு பசங்களை வெச்சுண்டு, பொண்ணு அனுக்ரகத்திலே ஆபரேஷன் பண்ணிக்க நாகேச்வரன் இஷ்டப்படுவானோ? அதுவும் என் பொண்ணு தானே போய்க் கல்யாணம் பண்ணிண்ட சமயம் எத்தனை சாபம் தந்திருப்பேன் எத்தனை வெறுப்பைக் கொட்டியிருப்பேன்? எத்தனை வார்த்தைகளைப் பேசி அவளை பங்கம் பண்ணை நெனைச்சிருப்பேன்? இப்ப அந்தப் பொண்ணுல நான் சகாயம் வாங்கிக்கிறது எனக்குப் பொருத்தி வரலே. அதுக்காக அவளை இப்ப நான் வெறுக்கறேன்னு அர்த்தமில்லே. அவளும் சரி, என் மாப்பிள்ளையும் சரி, எம்மேல பாசத்தைப் பொழிஞ்சு தர்ரா. அவா க்ஷேமமா, சந்தோஷமா தெனீச்வரர் அனுக்கிரகத்திலும், அவ அம்மா ஆசியிலும் சிரஞ்சீவியா எந்த நோய் நொடி இல்லாம இருக்கட்டும். ஆனா இந்த உதவி வேண்டாம்மா. மனசு என்னமோ நெரடுது.''

இப்படிப் பேசுவார் என்று எதிர்பார்த்தது தான். இருந்தும் பூமா மனசை நம்பிக்கைப் படுத்திக் கொண்டு சொன்னாள்.

''அப்பா, உங்களுக்கு எதிர் வார்த்தை சொல்றேன்னு வருத்தப்பட வேண்டாம். என் புத்தியும், மனசும், வயசும் சூழ்நிலையும், எதிர்காலமும் குடும்பத்தோட பொருளாதாரமும் எல்லாம் சேர்ந்து என் கல்யாணத்தை நடத்தி வச்சாச்சு. அதைவச்சு நான் செய்யப் போற கடமையைத் தடுக்க வேண்டாம். மூணு பசங்களோட என்னையும் சேர்த்துக்கோங்கோ. இந்தக் காலத்துப் பொண்ணும் பையனும் ஒண்ணுதானே? கன்னிகாதானம் செஞ்சிட்டாலே பொண்ணு கிட்ட எதையும் வாங்கக் கூடாதுன்னு சாஸ்திரம் சொல்றதா? அப்படியே சொன்னாலும் தர்றவாளும், வாங்கறவாளும் மனசு ஒப்பிட்டாத் தடை ஒண்ணும் இருக்காது. வெங்கிட்டு சார், நீங்களும் சொல்லுங்கோ.. நான் உங்க பொண்ணுதானே? நான் வேலைக்குப் போய் ஆயிரமோ ஐந்நூறோ சம்பாதிக்கக் கல்யாணம் ஆகாமலும் இருந்து பணம் தந்தா வாங்கிக்க மாட்டேளா ... நான் சம்பாதிச்சா என்ன, என் புருஷன் சம்பாதிச்சா என்ன? ரெண்டு பேரும் ஒண்ணுன்னு நீங்க படிச்சிருக்கிற எல்லா சாஸ்திரங்களும் சொல்றதே?''

நாகேச்வரன் முகம் மாறாமல் சொன்னார்.

''அம்மா நீ பேசறது உன் அம்மா பேசறது மாதிரியே இருக்கு... அவதான், தர்க்கரீதியா பேசுவா. நீயும் அந்த மாதிரிப் பேசறதுல ரொம்ப சந்தோஷம். ஆனா, ஊர் நாளைக்கு என்ன சொல்லும்னு, 'நாகேச்வரன் பொண்ணு ஓடிப்போறப்போ ஆயிரம் சாபம் கொடுத்துத் தன் பொண்ணே இல்லேன்னு ஊர்அறியச் சொன்னான். பொண்ணு ஓடிப்போன வேதனைல அவ அம்மாவும் உசிர விட்டா, இப்ப கண் ஆபரேஷனையே பொண்ணு தயவுல பண்ணிண்டான்னு சொல்லும். வயசானா கண் மங்கறது சகஜம்தான். ஸ்வாமி நடத்தறது போல நடத்தட்டும். நீ சிரமப்பட்டுக்காதே...'' என்று ஆணி அடித்தாற் போல் சொல்லி விட்டு எழ ஆரம்பித்தார்.

பூமாவுக்குப் பளிச்சென்று கண்ணில் நீர் பீறிட்டுக் கொண்டது.

''அப்பா, சித்த உட்காருங்கோ. ஊருக்குப் பயப்படாம உங்க மகளே கல்யாணம் பண்ணிட்டா. அப்புறம் நீங்க என்ன பயப்படறது? குடும்பம்னு அப்பா, மகள்னு ஆயிரம் இருக்கும். நீங்க சாபம் கொடுத்துப் பலிச்சா போச்சு? அப்புறம் அதுக்கு மேல ஊர் என்ன செய்யும்? நான் செய்த காரியத்தை என்னைப் பெத்த அம்மாவே கடைசி வரை தப்பா எடுத்துக்கலே. அவ போனதுக்கப்புறம் அவஇல்லாத கொறையை நான் தான் தீர்க்கணும். நான்தான் அம்மாவாக இருந்து அப்பாவையும் அண்ணாக்களையும் கவனிக்கணும்னுஇந்த ஊர் தான்மத்தியானம் பூரா வந்து எனக்கு உபதேசம் பண்ணிட்டுப் போச்சு. எனக்கு எப்போ அம்மா ஸ்தானம் வந்தாச்சோ அப்பவே, நீங்க சொன்ன காரணங்களும் ஊரோட அபவாதங்களும் அடிபட்டுப் போச்சு. ஒரு வார்த்தைகூட எதிர் வார்த்தை பேசாம, எங்க கூட நாளைக்குக் காலமே பொறப்பட்டுடுங்க. பூமா சொல்றேன்னு கேட்காம அம்மா சொல்றேன்னு கேட்டு வாங்க. அது தான் நீங்களும் நானும் அம்மாவுக்குச் செய்யக் கூடிய மரியாதை. என்ன வெங்கிட்டு சார், நான் சொல்றது சரிதானே?'' என்று பூமா அழுகையினூடே கேட்டதும், வெங்கிட்டு ஸார், ''வான்தவம், வான்தவம்'' என்று அழுத்தி அழுத்திச் சொன்னார். நாகேச்வரன் தம் மனசுக்குள் ஒளிபெற வார்த்தைகளாய்ச் சொன்னார்:

''நீ சொல்றுப்லேயே கேக்கறேம்மா.''

# தூபகலசம்

கோவி மணிசேகரன்

**யா**தவ நாடு இனி யாசக நாடாகி விடுமோ?

தேவகிரி தலைநகரம் தேள் கொட்டிய துடிப்பில் விஷமேறித் தவிக்கிறது.

ஆ! அதோ மாவீர ராட்சஸத் தளபதி மாலிகாஃபூர் பெரும் படையுடன் வந்து கொண்டிருக்கிருன்.

மாதவம் புரிந்து பெற்ற யாதவ நாடு மண்மேடாகப் போகிறது. அதில் புண்பட்டு மக்கள் புதையுண்டு போகப் போகிருர்கள்.

புழுங்கித் தவிக்கிறது தேவகிரி.

எவ்வளவு சொல்லியும் மகன் சங்கரத் தேவன் பிடிவாதமாக மறுக்கிருன்.

கப்பத்தைக் கட்டித் தொலைத்தால் என்ன?

எல்லாவற்றுக்கும் அந்தப் பாதகி, அரண்மனையை அழிக்க வந்த பூதகி சந்திரமுகிதான் காரணம். அழைத்து வந்தவனும் நானே. அவதிப்படுகிறவனும் நானே என்று அலை மோதிக் கொள்கிருர் மன்னர் ராமச்சந்திரன்.

மீண்டும் ஒரு முறை முயன்று பார்க்கலாமே...

மகன் சங்கரத் தேவனை நாடிச் செல்கிற போது....

அந்த அரண்மனை விளக்குகள் எல்லாம் தனது இமைகளுக்குள் கண் சிமிட்டுகின்றன என்கிற மாதிரி எதிரே வந்து கொண்டிருந்தாள் சந்திரமுகி.

'ஓ....சந்திரமுகி! உன்னை....!'

மனத்தின் பற்கள் நறநறக்கின்றன.

''சங்கரன் எங்கே?''

அவள் பதில் சொல்லவில்லை.

அவளது காற் சதங்கைகள் எள்ளி நகையாடுவது போல அந்தப்புரம் நாடிச் சென்றன.

என்ன இறுமாப்பு?

தனக்கு வந்தவள்; தனயனிடம் தாவி விட்டாள்.

தலையை உருட்டி விடலாம்.

தருணம் கிடைக்கவில்லை.

மகன் தன் தலைக்குக் குறி வைத்துவிடுவானே...

சீ! இந்த வடபுலத்து வரலாற்றிலேயே தந்தைக்கும் தனயனுக்குமே அன்று முதல் இன்றுவரை போராட்டம்... போராட்டம்.

இவர்கள் சுயரத்தப் பிரசவங்கள்தாமா?

ஓ...மனைவியைச் சந்தேகிக்கச் செய்கிறது!

'கப்பம் கட்டித் தொலையடா, மகனே!' என்ருல் சங்கரத் தேவன் கேட்கவா போகிருன்....

அவனது தூபகலசம்தான் துச்சமாக நடந்து போகிறதே!....

கி.பி. பதின்மூன்ரும் நூற்ருண்டின் இறுதியில் முதன் முறையாகத் தொன்மை மிக்க தென்னகத்தின் மீது இஸ்லாமியப் படையெடுப்பு நிகழ்கிறது.

அவ்விதம் படை திரட்டி வந்தவன் அலாவுதீன். அவனது கதை ஒரு பொருளாசை மிக்க கதை. அதன் காரணமாக யாதவ நாட்டு மன்னர் ராமச்சந்திரன் பொன்னும் மணியும் கொடுத்துச் சமாதான உடன்படிக்கை செய்து கொண்டான். தில்லி சுல்தான் ஜலாலுதீன் கில்ஜியைப் பகைத்துக் கொள்வதாவது?

தென்னகத்தில் ஒற்றுமை சிதைவுபட்டதால் ஏற்பட்ட பயம் இது.

அப்போது இப்படியான அபிப்பிராயம் தந்தவளே இந்தச் சந்திரமுகிதான்.

அச்சமயம் அவள் மன்னர் ராமச்சந்திரனின் ஆசைக் காதலி. 'எழுபது வயதில் இப்படி ஒரு காமக் கிழத்தி தேவைதானு?' என்று மகன் கேட்கிறபோது....

''நான் மன்னன்! எது வேண்டுமானுலும் செய்வேன்'' என்று பதில் கூறியவர்தாமே இந்த ராமச்சந்திரன்!

இப்போது...

பொக்கிஷமே காலியாகிவிடவே, வலிந்து தந்தையை அரியணையிலிருந்து இறக்கினன் சங்கரத் தேவன். மறுத்தால் சிறை வாசம். அதைவிட, 'சிவனே' என்பதற்குப் பதில் 'மகனே' என்று இறங்கிவிட்டு ஆசை நாயகியுடன் தனி வாழ்க்கை நடத்தலாம் என்று எண்ணினுர்.

பாவம்....

அந்த வயது அவளது பசிக்குச் சோளப் பொரி!

இது புரிய வேண்டுமே...

அரண்மனைக்குள் நுழைகிறவரை மன்னர் ராமச்சந்திரனின் கண்களை மடி மேல் போட்டுத் தாலாட்டினுள்.

அரண்மனைக்குள் நுழைந்து சங்கர தேவனைக் கண்ட பிறகு...

சங்கரத் தேவனும் சந்திரமுகியின் நீல நயனங்களைச் சந்தித்த பிறகு...

இருபத்தைந்து வயது முப்பத்தைந்து வயதுடன் ஒட்டிக்கொண்டு, இடைப்பட்ட பத்தாண்டுகள் வித்தியாசத்தை மிகப் பதமான வித்தியாசமாகக் கருதி, நேரம் கிடைக்கும்போதெல்லாம் காமவீணை மீட்டிக் கள்ள ராகம் பாடியது....

இப்போது ஆட்சியும் மகன் கையில்; ஆசையும் அவனது பையில்...

---

* 17000 பவுண்டு பொன்; 200 பவுண்டு முத்து 58 பவுண்டு ரத்தினங்கள்; 2800 பவுண்டு வெள்ளி; 1000 பட்டுத் துண்டுகள் - பிப்ரவரி 1294 கி.பி.யில் நடைபெற்ற யுத்தம்.

ஏங்கிப் போனார்; ஏமாந்து போனார்; ஏதும் செய்யமுடியாது சோர்ந்து போனார்; ஏன்? கருண்டும் போனார் மன்னர் ராமச்சந்திரன்.

கப்பம் கட்டத் தவறியதற்காக அதோ அலாவுதீன் எடுத்து வளர்த்த அலி புலியாகிச் சீறிப் பாய்ந்து வருகிறது....

இத்தனைக்கும் காரணம் வாரங்கல் யுத்தம். அலாவுதீன், தனது முதல் தளபதியான *மாலிக் பக்ருதீன் ஜீனாவை அனுப்ப, அவன் காகதிய நாட்டைக் கடக்கிறபோது கண்ட தோல்வியும், பின்னர் வாரங்கல் யுத்தத்தில் அடைந்த வீழ்ச்சியும்தானே, சங்கரத்தேவனை தலைநிமிரச் செய்து விட்டது. போதாக் குறைக்குச் சந்திரமுகி எனும் தூபகலசம் வேறு....

வீழ்த்தப்பட்ட அலாவுதீனுக்கு நாம் ஏன் கப்பம் கட்ட வேண்டும்?...

இடையில் ஒருசில ஆண்டுகளே...

அதோ வருகிறான் ராட்சஸ யுத்த வெறியனை மாலிகாஃபூர்.

காகதியம் கதிகலங்கிப் போனது.

வாரங்கல் ஓரங்கட்டி விட்டது.

தேவகிரி பணிந்தால் தென்னாட்டையே பணிய வைத்துவிடலாம்.

**தே**வகிரி தலைநகர் முற்றுகையாகிறது.

பொழுது விடிந்தால் போர் முகம்.

அந்தப்புரத்துச் சயன அறையில் காம விளக்குகள் மன்மத நடம் புரிகின்றன.

ரதியனைய அழகு படைத்த சந்திரமுகி சயனித்துக் கொண்டிருக்கிறாள்.

''சந்திரமுகி நாளைய போரை நினைத்தால் பயமாகத்தான் இருக்கிறது. வழியில் பல அரசுகள் வீழ்ந்து பட்டனவாம். பலகோடி பொருள்கள் விரயமாயினவாம்! ஒற்றர்கள் சொன்னார்கள்.''

''அதற்காக நமது பொக்கிஷத்தைக் காலியாக்க வேண்டுமா? மாலிக்காபூரை வீழ்த்தினால் அவன் கொள்ளையடித்து நிரப்பி வந்திருக்கும் பொருளை யடையலாம். ஒரு சமயம் நாம் இழந்த பொன்னையும் மணிகளையும் இப்போது மீட்கலாம். அன்றைக்கு அபிப்பிராயம் சொன்னவளும் நான்தான். இன்றைக்கு அபிப்பிராயம் சொல்கிறவளும் நான்தான். யுத்தம் நடக்கட்டும் எப்படியாவது அந்த அலிப்பயலைச் சதி மூலம் சாகடிக்க முயலுங்கள். அவன் வீழ்ந்தால் பிறைக் கொடி வீழ்ந்து பட்ட மாதிரிதான். ஓடி ஒளிவதை விட ஒழிந்து மடிவதே மேல்!''

தூபகலசம் நன்றாகவே புகைந்தது.

அன்றிரவும் நன்றாகவே இனித்தது.

பொழுதும் நன்றாகவே புலர்ந்தது.

போர் முரசம் கொட்டினான் மாவீரன் மாலிகாஃபூர்.

யாதவ நாட்டுப் படைகள் அணிவகுத்து விட்டன.

ஒன்று மாலிகாஃபூர்; இல்லை சங்கரத் தேவன்.

ஆமாம்; மன்னர் ராமச்சந்திரன் எங்கே? எங்கே?

சங்கரத் தேவன் மட்டுமல்ல; சதுராடிய தூபகலசம் — சந்திர முகியும் சலசலத்துப் போயினர்.

மன்னர் ராமச்சந்திரனைக் காணோம்!

**ஒ**ரு வார யுத்தத்துக்குப் பிறகு வீழ்ந்தது தேவகிரி.

அதன் வீழ்ச்சிக்கு மூல காரணம் மன்னர் ராமச்சந்திரன்தான் என்பது அப்போதைய மன்னன் சங்கரத் தேவனுக்கு நன்றாகவே புரிந்தது. எதிரிகள்பால் சரணடைந்து, தமக்குரிய போர்வீரர்களை — யாதவ நாட்டின் மூன்றில் ஒரு பகுதியான போர் வீரர்களை— மணிமுடியைப் பறித்துக் கொண்ட சங்கரத் தேவன்பால் மனமுறிவுடனிருந்த போர் வீரர்களை எதிரியின்பால் சேரவைத்துக் கண்ட வெற்றி என்பது சங்கரத் தேவனுக்குப் புரிந்தது.

''துரோகி!''

அவனது உதடுகள் மூர்க்கமாக முனகுகின்றன.

அந்த முனகல் ஓயுமுன் அவனும் அவனைச் சார்ந்தவர்களும் சந்திரமுகியும் சிறைப்பட்டு விலங்கேற்றனர்.

மன்னர் ராமச்சந்திரன் செய்தது துரோகமா?

தமது மண்ணை எதிரிகளுக்கு அடகு வைத்தாரா?

**''இ**ல்லவே இல்லை''— பெருங் குரலெழுப்பிக் கர்ஜிக்கிறான் தில்லி சுல்தான் அலாவுதீன்.

ஓ...தர்மமா அது?

அருள் வடிவமான மகா சுல்தான் ஜலாலுதீன் இல்ஜியின் தங்கச் சுரங்கமாயிற்றே தில்லியின் ஆட்சி பீடம்.

* இவன்தான் பின்னாளில் முகம்மதுபின் துக்ளக் ஆனவன்



இங்கும் யாதவக் கதைதான்.
அங்கே மகனுக்கும் தந்தைக்கும்!
இங்கே மருமகனுக்கும் மாமனுருக்கும்!
அங்கே ராமச்சந்திரனை உயிருடன் விட்டு வைத்தான்.

இங்கே ஜலாலுதீன் டில்ஜியைச் சமாதிக்குள் அனுப்பி விட்டான்.

அனுப்பியவன் இப்போது அனுப்ப மறுத்தவனை அல்லது மறந்தவனைக் கண்டு அகங்காரமாகச் சிரிக்கிறுன்...

''சங்கரத் தேவா! விதி வசமாக மூன்ருண்டுகளுக்கு முன்பு மாலிக் பக்ருதீன் ஜூனவை வாரங்கல் போருக்கு அனுப்பினேன். வழியில் காகதீயர் சதியில் பக்ருதீன் ஜூன தோல்வி கண்டு திரும்பினுன். அதையே சாதகமாக வைத்துக் கப்பம் கட்ட மறுத்தாய்! யாரிட்ட தூபம் இது? அதோ உனது பக்கத்தில் நிற்கிருளே படிக்கு உதவாப் பத்தினி — உனது தந்தையை மயக்கிய பத்தினி — முடிவில் உன்னைத் தூண்டிய சித்தினி— அவளா?''

அலாவுதீனின் இந்தக் கேலி மொழி கேட்டுத் தர்பாரே சிரித்தது.

தலைகுனிந்து போனுன் சங்கரத் தேவன்.
தலை வெடித்துப் போனுள் சந்திரமுகி.

''உனக்கு என்ன தண்டனை வேண்டும் என்று எதிர்பார்க்கிருய் சங்கரத் தேவா?''

சங்கரத் தேவன் அந்தத் தர்பாரைச் சுற்றிப் பார்க்கிருன்.

''யாரைத் தேடுகிருய்? உனது தந்தையாரையா? அவர் இங்கேதான் சௌக்கியமா இருக்கிருர். உனது சௌகரியத்தைப் பற்றிக் கேட்கிறேன். பதில் தேவை.''

''இனிமேல் தொடர்ந்து கப்பம் கட்டுவேன் சுல்தான். மன்னியுங்கள்.''

''உன்னை மட்டுமா? இவளையுமா?''
''இருவரையுமே!''
''ஓ... இருவரையுமா?''

தர்பார் கிடுகிடுக்கிற மாதிரி ஒரு கர்ஜனைச் சிரிப்பு....

''அவனை மன்னிக்கிறேன். உன்னைப் பாதாளச் சிறையில் அடைக்கிறேன்.''

''சுல்தான்!'' என்று குரல் கொடுத்த வண்ணம் வெளிப்பட்டார் மன்னர் ராமச்சந்திரன்.

அவையில் சில கணங்கள் அமைதி.

''கவலைப்படாதீர்கள் ராமச்சந்திரரே! இந்தத் தூபகலசத்தின் புகை எனது நாசியை ஒன்றும் செய்துவிட முடியாது. நான் பல செடிகளைப் பார்த்து இந்தத் தில்லிமா நகரைக் கைப்பற்றியவன். இது சாதாரண செடி! தந்தைக்கு வாய்த்தவள் மகனுக்குள் புகுந்தவளை என்ன செய்ய வேண்டும் என்பதை என்னிடம் விட்டுவிடுங்கள்!''

அயர்ந்து போனுன் சங்கரத் தேவன்.
அரண்டுபோனுள் சந்திரமுகி.
ஆறு திங்களுக்குப் பிறகு....

பொன்னும் மணியும் வெகுமதியாய்ப் பெற்று யாதவ நாட்டை நோக்கிப் பயணமாகிருர் மன்னர் ராமச்சந்திரன்.

அந்தத் தில்லிமாநகரின் பெரு வழியில்...
எங்கோ ஒரு குரல்.
சுநாதமான குரல்,

# அருள் வாக்கு...



ஒரு காக்கை இருக்கிறது. எங்கேயோ ஒரு பழத்தைச் சாப்பிட்டுவிட்டு நம் தோட்டத்திலே வந்து எச்சமிடுகிறது. அந்தப் பழத்தின் கொட்டை இங்கே நம் வீட்டுத் தோட்டத்தில் விழுந்து மரமாகிறது. அந்த காக்கை நமக்கு ஓர் உபகாரம் பண்ணி விட்டது. நாய் காவல் காக்கிறது. குதிரையை வண்டியில் கட்டிச் சவாரி பண்ணுகிறோம். கோமாதா நமக்குப் பௌதிகமாகவும் ஆத்மார்த்தமாகவும் பண்ணுகிற உபகாரம் கொஞ்ச நஞ்சமில்லை. இப்படி எல்லாரிடமும் உபகாரம் பெற்றுவிட்டு மனுஷ்ய ஜன்மா எடுத்துள்ள நாம் பிரதி உபகாரம் பண்ணுமல்இருந்தால் பாபம் அல்லவா?

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சந்திர சேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சாரிய சுவாமிகள்

இறைவன் நடுநிலை தவறுதவன். பாரபட்சமில்லாதவன். நாம் செய்த நல்வினைகளுக்கு ஏற்ப சுக துக்கங்களை வகுத்து விதிக்கின்றுன். இறைவனுடைய அருளாணையால் விதிக்கப்பட்டது விதி யெனப்படும்.

—திருமுருக கிருபானந்தவாரியார்

நேர்ந்த சம்பவங்களினுல் உன்னுடைய மனம் அமைதி கெட்டால் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் மறுபடி அமைதியை உள்ளத்தில் ஏற்படுத்திக் கொள். ஒரு கணமும் தாமதிக்க வேண்டாம். அவ்வாறு கவனித்து வந்தால் அதுவே பழக்கமாகி, சாந்த சித்தம் கலையாமலே இருக்கும்.

—ராஜாஜி — ஆத்ம சிந்தனை

ஓ....அது சந்திரமுகியின் குரலல்லவா?

ஓர் ஆலயத்தின் வாசற்படியில் கண்கள் இரண்டையும் இழந்து பாட்டுப் பாடி யாசித்துக் கொண்டிருக்கிருள் சந்திரமுகி.

அந்தக் கண்கள் — தூபகலசங்கள் என்ன பாடு படுத்தின...

கண்கள் குத்துண்டும் அவள் இன்னும் கவிதை மெருகுடன்...

'சீ! கெடுட்டு சபலமே!' என்று மன்னரது மனம் உறுத்த....

பயணம் தொடர்ந்தது.

# க்விஸ் க்விஸ்



1. சென்னை டி. வி. நிலையத்தில் நிகழ்ச்சிகளைக் கலரில் ஒளிபரப்புகிறார்கள்(!) என்று வைத்துக் கொள்வோம். ஆனால் உங்களிடம் கருப்பு வெள்ளை டி.வி.தான் இருக்கிறது. அவற்றில்,
(அ) கருப்பு வெள்ளைப் படங்கள் தெரியும்
(ஆ) கலரிலேயே படங்கள் தெரியும்.
(இ) சிலோன் நிகழ்ச்சிகள் மட்டும் கலரில் தெரியும்.
(ஈ) படமே தெரியாது.

2. பூமிக்கும் சந்திரனுக்கும் இடையிலான தூரம் ஒரே அளவில் இருப்பதில்லை. நாளுக்கு நாள் மாறி வருகிறது. சந்திரன்,
(அ) பூமியை நெருங்கி வருகிறது
(ஆ) பூமியை விட்டு விலகிப் போகிறது
(இ) மாறி மாறி நெருங்கி விலகுகிறது
(ஈ) மேற்சொன்ன மூன்றும் தவறு.



3. அ. ஆ. இ. ஈ என்ற உங்களுடைய நான்கு நண்பர்கள் கீழ்க்கண்ட வியாதிக்காக ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறுகிறார்கள். நால்வரில் யாரைப் போய்ப் பார்ப்பது உங்களுக்குப் பாதுகாப்பானது?
(அ) டி. பி.
(ஆ) பொன்னுக்கு வீங்கி (மம்ஸ்)
(இ) சின்னம்மை
(ஈ) புற்று நோய்

4. இப்போது எல்லாக் கடல்களிலும் எவ்வளவு தண்ணீர் உள்ளதோ அதே அளவு நிறையுள்ள தண்ணீரை நதிகள் மூலம் கடல் பெற எவ்வளவு காலமாகும்?
(அ) 22 வருடங்கள்
(ஆ) 44,000 வருடங்கள்
(இ) 1000 வருடங்கள்
(ஈ) 100 வருடங்கள்

5. பிரபஞ்சத்தில் நிறைந்துள்ள மூலகம் எது?
(அ) ஹீலியம்
(ஆ) ஆக்ஸிஜன்
(இ) ஹைடிரஜன்
(ஈ) சிலிக்கான்



6. தலை முடிக்கு டை போடும்போது கொஞ்சம் சிந்தி உடையில் கறையாகிவிடுகிறது. அப்போது என்ன செய்வீர்கள்?
(அ) சோப்பால் கழுவுவீர்கள்
(ஆ) பிளீச்சிங் பவுடர் உபயோகிப்பீர்கள்
(இ) கிளிசரினால் சுத்தம் செய்வீர்கள்
(ஈ) துணியைத் தூக்கி எறிந்துவிடுவீர்கள்.

7. அடுத்த பக்கத்தில் புகைப் படத்தில் காணப்படுவது என்ன?
(அ) மணல் கோபுரங்கள்
(ஆ) எரிமலைகள்
(இ) 100 மடங்கு பெரிதாக்கப்பட்ட வேர்க்குரு

விஞ்ஞானப் பக்கங்கள்

# க்விஸ் க்விஸ்

— நளினி சாஸ்திரி —



(ஈ) 10 மடங்கு பெரிதாக்கப்பட்ட டியூமர் கட்டிகள்

8. ஒருவனின் பித்தப் பையில் கோளாறு காரணமாகத் தடை ஏற்படுகிறது. அதன் உடனடி விளைவு என்னவாக இருக்கும்?
(அ) இரத்த ஓட்டத்தில் தொந்தரவுகள்
(ஆ) கொழுப்புப் பொருள் ஜீரணமாகாமை
(இ) சிறுநீர் கழிப்பதில் சிரமம்
(ஈ) மூச்சுத் திணறல்

9. ஒரு மூலகம் அவ்வளவு எளிதாக மற்றொரு மூலகமாக மாறாது. ஆனால் கீழ்க்கண்டவற்றுள் ஒரு இடத்தில் ஒரு மூலகம் மற்றதாக மாறுகிறது. அதைக் கண்டுபிடியுங்கள்.
(அ) ரேடியம் டயல் கடிகாரம்
(ஆ) இரும்புத் தொழிற்சாலையில் உள்ள உலை
(இ) டியூப்லைட்
(ஈ) சிகரெட் லைட்டர்

10. பொதுவாக ஒலிபரப்பில் AM (Amplitude modulation) FM (Frequency modulation) ஆகிய இரண்டு முறைகளை உபயோகிக்கிறார்கள். டி.வி.யில் ஒலி, ஒளி ஆகியவற்றை எந்த முறையில் ஒலிபரப்புகிறார்கள் (சென்னையில்)
(அ) இரண்டுக்கும் FM
(ஆ) இரண்டுக்கும் AM
(இ) படம் AM ஒலி FM
(ஈ) படம் FM ஒலி AM

விடைகள்:

1. (அ) கலர் டி. வி.யில் கருப்பு வெள்ளைப் படம் தெரியும். ஆனால் கருப்பு வெளுப்பு டி. வி.யில் கலர் ஒளிபரப்பின் நிகழ்ச்சி கருப்பு வெள்ளையாக மட்டும் தெரியும்.
2. (ஆ) சந்திரன் பூமியை விட்டு விலகிப் போகிறது. ஆயிரக் கணக்கான ஆண்டுகள் கழித்து சந்திரன் நமக்குப் புள்ளியாகத்தான் தெரியும். அப்போது சூரிய கிரகணம் ஏற்படாது.
3. (ஈ) சின்னம்மை எளிதில் பரவக்கூடியது. பொன்னுக்கு வீங்கியும் தொற்று நோய். டி. பி. கிருமிகள் காற்று வழியே தொற்றக் கூடியது. கேன்ஸர் மட்டும் தான் பரவாத வியாதி.
4. ஆ. உலகக் கடல்கள் $1.4 \times 10^{21}$ கிலோ கிராம் தண்ணீர் கொண்டது. நதிகள் ஒரு நொடிக்கு $10^{9}$ கிலோகிராம் தண்ணீரைக் கடலில் கலக்கின்றன. இந்த ரீதியில் இப்போது கடல் கொண்டுள்ள நிறைக்கு நீரைச் சேர்க்க நதிகளுக்கு 44,000 ஆண்டுகள் ஆகும்.
5. (இ)
6. (ஈ) ஹேர் டையில் பாரா-பீனைலின் என்ற பொருள் உள்ளது. இதுவே கருப்பாக மாறுகிறது. இதனை நீக்குவது இயலாத காரியம். எனவே துணியைத் தூக்கி எறிவதுதான் நலம்.
7. (ஆ)
8. (ஆ)
9. (அ) ரேடியம் டயலில் கதிரியக்கம் விளைவாக ஒரு மூலகம் மற்றதாக மாறுகிறது.
10. (இ)

கணவன் : உன் பிறந்தகத்திலிருந்து வர்ற கடிதாசெல்லாம் கார்டிலே பொடிப் பொடி எழுத்திலே வருதே அத்தனை சிக்கனமா உங்க அப்பா அம்மா?

மனைவி : சானேச்சுரக்காரியான உங்கம்மா படிக்கமுடியாமல் இருக்கட்டும்னு நான்தான் அப்படி எழுதச் சொல்லி இருக்கேன்.

- கே. ஆர். எம்.



# பேர்ளவ

## மலர் மன்னன்



திறந்துகிடந்த ஜன்னல் வழியாகக் கொல்லைப்புறம் தெரிந்தது. சமையல்கட்டிலிருந்து கொல்லைப்புறத்துக்குப் போகிற நடையில் எரிகிற ஜீரோ வாட் பல்பின் வெளிச்சத்தில் அப்பா குளித்துக் கொண்டிருப்பதைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. கிணற்றடியில் நின்று வாளி வாளியாகத் தண்ணீர் சேந்தி தலைக்கு ஊற்றிக் கொண்டிருந்தார். வாய் அரற்றிக் கொண்டே இருந்தது. அவர் குரல் கேட்காவிட்டாலும் குளிக்கிறபோது அவர் என்ன சொல்வார் என்று சுந்தரத்துக்குத் தெரியும். அகமர்ஷண ஸூக்தம். அதைச் சொல்லிக் கொண்டேதான் ஸ்நானம் செய்ய வேண்டுமாம். கேட்டால், 'அகம்–பாவம், மர்ஷணம் – அடக்குதல், ஸூக்தம் – நல்ல வார்த்தை. பாவத்தை அடக்குகிற நல்ல வார்த்தை' என்று அர்த்தம் சொல்வார். அப்புறம் அரையிலிருக்கிற துண்டைப் பிழிய ஒரு மந்திரம், சிகையைப் பிழிய ஒரு மந்திரம் ஸ்பஷ்டமாகச் சொல்வார்.

'வஸ்திரத்தைப் பிழிகிற ஜலம் வாலோதகம். சிகையைப் பிழிகிற ஜலம் சிகோதகம். ரெண்டும் அதிகமான பாவங்கள் பண்ணிட்டு நரகத்திலே தாகத்துக்குத் தவிக்கிறவாளுக்குப் போய்ச் சேரும்' என்பார்.

அப்பா செய்கிற ஒவ்வொரு காரியத்துக்கும் ஒரு அர்த்தம் இருக்கும். முதுகைச் சொறிந்து கொள்வதற்குக் கூட தன்னலமற்ற நோக்கம் ஒன்றை அவரால் சொல்ல முடியும். சும்மா, வெறும் சவடாலாக அல்ல. ஸ்மிருதிகளிலிருந்தே ஆதாரம் காட்டிச் சொல்லத் தெரியும், அவருக்கு.

பெரிய கலசம் மாதிரி மொட்டை மாடியில் ஓவர் ஹெட் டாங்க் இருக்கிறது. படுக்கை அறையை விட்டு வெளியே வர வேண்டிய அவசியமில்லாதபடி உள்ளுக்குள்ளேயே குளியலறையும் இருக்கிறது. வீட்டுக்குள் திரும்பிய இடமெல்லாம் வாஷ் பேசினும் திருகினால் தண்ணீர் கொட்டுகிற குழாயும் இருக்கின்றன. எல்லாம் அப்பாவே பார்த்துப் பார்த்து ஏற்பாடு செய்தவை. ஆனால் கிணற்றடியில்தான் அவருக்குக் குளியல். வீட்டில் அவரைத் தவிர வேறு யாருமே கிணற்றடியைப் பயன்படுத்துவது கிடையாது.

வாழை, தக்காளி, மிளகாய், வெண்டை, புடலை, பாகல், அந்தி மந்தாரை, முல்லை என்று பாத்தி பாத்தியாகப் பெரிய கொல்லைதான். நீரூற்றுவதற்கும் பராமரிக்கவும் நியாயப்படி தனி ஆள் போட வேண்டும். ஆனால் அதற்கு அவசியமில்லாதபடி அப்பாவே இரண்டு வேளை குளித்தும், மண் வெட்டியும், எருக்கூடையுமாக அலைந்து திரிந்தும் தாமே கொல்லைப்புறத்தைக் கவனித்துக் கொண்டு விடுகிறார்.

வெள்ளைக்காரன் கம்பெனியில் முப்பது வருஷம் சேவை செய்து, டைரக்டர் போர்டிலேயே இடம் கிடைக்கிற வரை உயர்ந்து, ஓய்வு பெறுவதற்குச் சில வருஷங்களே இருக்கிறபோது முன் யோசனையுடன் இந்த வீட்டைக் கட்டிவிட்டார், அப்பா. கட்டி முடிப்பதற்குள் எண்பதாயிரம் வரை இழுத்துக் கொண்டு போய்விட்டதாம். கம்பெனியில் முன் பணம் கொடுத்தார்கள். அவரது சேமிப்பிலும் போதுமான அளவுக்குப் பணம் இருந்தது. மூச்சைப் பிடித்துக் கொண்டு கட்டி முடித்து விட்டார். இன்றைக்கு ஐந்து லட்சத்துக்கு வீட்டைக் கேட்கிறார்கள்! அப்பாவுக்கு இதில் அசாத்தியப் பெருமை. நல்ல வேளை. முன்யோசனை இருந்தது.

தப்பிவிட்டார். நம்மால் ஆகுமா என்று மலைக்காமல், அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று தள்ளிப் போடாமல் காற்று உள்ளபோதே தூற்றிக் கொண்டு விட்டார்.

வேலையிலிருந்து ஓய்வு பெற்ற மறு நாளிலிருந்து அப்பாவின் நடைஉடை பாவனைகள் எல்லாமே மாறிப்போய்விட்டன. இடரென்று நெற்றிக்கு மேல் முன்னந் தலையில் கொஞ்சம்போல் மழித்துக் கொண்டு வந்து சேர்ந்தார். தட்டுச் சுற்ருக இருந்த வேஷ்டி பஞ்ச கச்சமாக மாறியது. விபூதி அழிந்து விடாமல், சாயங்காலம் வரை இருக்கிறாற் போல் நீரில் குழைத்துப் பட்டை பட்டையாக நெற்றியில், கைகளில், மார்பில், தோள்களில் என்று உடம்பு பூராவுமே இழுத்துக் கொண்டார். கட்டுக் கட்டாகத் தமிழிலும் சம்ஸ்கிருதத்திலும் தோத்திரப் புத்தகங்கள் வாங்கி வந்து பூஜை அறையில் அடுக்கினர். அன்று சாயந்திரமே ஒரு கனபாடிகள் அப்பாவுக்கு சம்ஸ்கிருதம் கற்றுக் கொடுக்கத் தொடங்கினர்.

அப்பா வெள்ளைக்காரன் கம்பெனியில் பெரிய துரைக்கு வலக் கரமாகவே இருந்தவர். அவனோடு இரண்டு தடவை லண்டனுக்குக் கூடப் போய் விட்டு வந்தார். 'தட்ட முடியாது' என்று தவருமல் பார்ட்டிகளுக்குப் போய்விட்டு நடு ராத்திரியில் கண்கள் சிவக்கத் திரும்பி வருவார்.

கடந்த ஏழெட்டு வருஷங்களாகவே வீட்டில் சுந்தரமும் அப்பாவும் மட்டும்தான். அவனுக்கு மூத்தவர்களான மூன்று அக்காமார்களும் கல்யாணமாகி, பேர்க்களீ, மணிலா தில்லி என்று போய்விட்டார்கள். பெண்கள் தனிக் குடித்தனம் நடத்த இப்படித் தொலை தூரங்களுக்குப் போனதும் அம்மாவுக்கு இறக்கை முளைத்து விட்டது. வருஷத்துக்கு இரண்டு மாதங்கள் அவள் ஊரோடு இருந்தால் அதுவே அதிகம். ஆனால் அப்பா இதைக் கண்டுகொள்ளவே இல்லை.



இருந்தாலும் அப்பா ரொம்பக் காரியவாதிதான். உடம்புக்காக இத்தனை வருஷங்கள், ஆத்மாவுக்காக இத்தனை வருஷங்கள் என்று வாழ்க்கையைச் சுலபமாகப் பகுத்துக் கொண்டு விட்டார். உடம்பின் தொடர்ச்சியான தேவைகளுக்காகத் இண்டாடாத வாறும் புத்திசாலித்தனமான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறுர். கணிசமான வட்டி வருகிற மாதிரி வங்கியில் ஒரு தொகை. காம்பவுண்டுக்குள்ளேயே கட்டிய அவுட் ஹவுசைக் கொஞ்சம் நவீனப்படுத்தி நல்ல வாடகைக்கு விட்டிருக்கிறுர். போதாக்குறைக்கு ஒரு பக்கத்துக் காம்பவுண்ட் சுவரை இடித்து மூன்றுகடைகள் கட்டிவிட்டு, அவற்றிலிருந்தும் வாடகை வருகிறது. இனிமேல் அவர் தைரியமாக மணிக் கணக்கில் பூஜை அறைக்குள்ளேயே அடைந்து கிடக்கலாம். வேதாந்த விசாரம் செய்யலாம். எதுவும் குடி முழுகிப் போய்விடாது.

அப்பா பார்ட்டிகளுக்குப் போய்விட்டுப் பாதி நாட்களில் கண்கள் சிவக்க வீடு திரும்பிய நாட்களில் சுந்தரத்துக்கு அவர் மேல் எந்தவித அபிப்பிராயமும் தோன்றியதில்லை. ஒரு சமூக நிர்ப்பந்தம் என்பதற்கு மேல் அதைப் பற்றி வேறு எதுவும் அவனுக்கு நினைக்கத் தோன்றியதில்லை.

வேலையிலிருந்து ஓய்வு பெற்ற கையோடு ஒரேயடியாக மாறிப்போன அப்பாதான் அவனுடைய கவனத்துக்குரியவரானுர்.

சமூகத்தின் கண்களுக்கு அப்பாதான் வெற்றிகரமான புருஷன். மற்றவர்களுக்கு ஆதர்சமாக இருக்கத் தகுதி வாய்ந்தவர். உலகியல் தேவைகளை யெல்லாம் நிறைவு செய்து கொண்டார். தேவைகளின் பூர்த்திக்காக இனி அலையத் தேவையில்லை என்று நிச்சயமான பிறகு தைரியமாகப் பர சிந்தனையை மேற்கொண்டார். சாமர்த்திய சாலிதான்.

கொல்லை விளக்கு அணைந்து இருள் கவ்விக் கொண்டது. அப்பா குளியல் முடித்துத் திரும்பியாயிற்று. சுந்தரம் படுக்கையில் திரும்பிப் படுத்துக் கொண்டு பொழுது முற்றிலும் விடிகிறவரை இன்னெரு குட்டித் தூக்கம் போட எத்தனித்தான்.

அப்பா இனி நேராகக் கோவிலுக்குப் போவார். நிர்மால்ய தரிசனம். அங்கிருந்து வீடு திரும்புவதற்குள் மணி ஏழரையாகி விடும். அத்தைப் பாட்டி கொடுக்கிற வறுத்த அரிசிக் கஞ்சியை குடித்துப் பருகிய வாறு பேப்பரை மேய்வார். வேலையிலிருந்து ஓய்வு பெற்ற மறுநாளே அவர் காப்பியை விட்டாயிற்று.

தாம் வேலையிலிருந்தபோதே தம் செல்வாக்கைப் பயன்படுத்தி சுந்தரத்தை வேறு ஒரு கம்பெனியில் நுழைத்து விட்டார் அவர். நல்ல வேலை. கொடுப்பினை இருந்தால் அவனும் அவர் மாதிரியே போர்டில் இடம் பிடிக்கிற வரை உயர்ந்து ஓய்வு பெறலாம்.

சுந்தரம் காலையில் ஒன்பதரைக்கெல்லாம் புறப்பட்டு விடவேண்டும். அவனோடு சேர்ந்து இவரும் சாப்பாட்டை முடித்துக்கொள்வார். பத்து மணிக்கு மேல் கனபாடிகளிடம் சம்ஸ்கிருதப் படிப்பு, சந்தேக விளக்கம்,

தர்க்கம் என்று அதில் இரண்டு மணி நேரம் கழியும். அதற்கிடையில் இரண்டு தடவை மோரும் ஜூஸும் வரும். பன்னிரண்டிலிருந்து மூன்று வரை தூக்கம். எழுந்தவுடன் பலகாரம். அதற்கப்புறம் தோட்ட வேலை. குளியல். சாயங்காலம் சங்கீதக் கச்சேரி, உபந்நியாசம் இப்படி எதற்காவது போய்விட்டு வருவார். படுக்கப் போகுமுன் பூஜை அறையில் அரை மணி நேரம் போல் தியானம்.

உபநிஷத்துக்களின் சாரம், வேத ரகசியம் எல்லாவற்றுக்கும் தாமே 'அதாரிட்டி' என்கிற மாதிரியான அவரது பேச்சு. சுந்தரம் இதற்காகவே நேரம் கழித்து வீடு திரும்புகிற வழக்கத்தை மேற்கொள்ள வேண்டியதாயிற்று.

**பொ**ழுது முழுவதாகப் புலர்ந்து, சுந்தரம் தன் அறைக்குள்ளேயே காலைக் கடன்களையெல்லாம் முடித்துக் கொண்டு சாப்பிடுவதற்காக மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தபொழுது கூடத்தில் அப்பா யாருடனோ பேசிக் கொண்டிருப்பது தெரிந்தது. எட்டிப் பார்த்தான். அப்பாவுக்கு எதிரே நீண்ட சோபாவில் நான்கு இளைஞர்கள் வரிசையாக உட்கார்ந்திருந்தார்கள்.

''ப்ளீஸ். இதிலேயெல்லாம் என்னை இழுக்காதேங்கோ. ஏதானா பூஜை, இல்லை, திருப்பணியா, கேளுங்கோ, டொனேஷன் தரேன்'' என்றார் அப்பா.

''உங்க மாதிரி பெரியவங்க முதல் ஆளா நின்னா அதுக்குத் தனி மரியாதை இருக்கும். ஜனங்களுக்கும் தன்னம்பிக்கையும் தைரியமும் வரும்னுதான் கூப்பிடறோம். நாங்களா இதிலே இறங்கினா வீண் வம்பு வளர்க்கறாங்கன்னுதான் படும்'' என்றான் வந்திருந்தவர்களில் ஒருவன்.

''எனக்கே இது வீண் வம்புன்னுதான் படறது. அவங்க செஞ்சாச் செஞ்சுட்டுப் போகட்டுமே. நமக்கு நம்பிக்கை இருக்கு. பக்தி இருக்கு. அது போறாதா?'' என்றார் அப்பா.

''இவங்கள்ளாம் சின்னதா ஒரு சத்சங்கம் வெச்சு நடத்திண்டு இருக்கா. நல்ல காரியந்தான். ஆனா இப்ப இவா செய்ய நினைக்கிற வேலைதான் கவலையாப் படறது'' என்றார் அப்பா.

''என்ன விஷயம் '' என்று அவர்களைப் பார்த்துக் கேட்டான் சுந்தரம்.

''நம்ம பிரசன்ன விநாயகர் கோயில் இருக்குது இல்லீங்களா? அங்கே கோவில் சுவரிலேயே 'கடவுளை நம்பறவன் முட்டாள்' 'கடவுளைக் கற்பிச்சவன் அயோக்கியன்'னு எழுதி வெச்சாங்க. நாங்க அதை அழிச்சுட்டோம். திரும்பியும் எழுதினாங்க. நாங்க மறுபடியும் அழிச்சோம். இன்னிக்குக் காலம்பற கோயிலுக்குப் பக்கத்திலேயே ஒரு கம்பம் நட்டு ஒரு தகட்டிலே அதையே பெயிண்டாலே எழுதி மாட்டி வெச்சிருக்காங்க. போலீசிலே கம்ப்ளெயிண்ட் எழுதிக்குடுத்தா 'அதுவும் பாட்டுக்கு இருந்துட்டுப் போகுது. உங்களை என்ன பண்ணுது? நீங்க பாட்டுக்குச் சாமியைக் கும்பிட்டுட்டுப் போக வேண்டியது தானே? சாமி கும்பிடப் போறவங்க கம்பத்திலே என்ன கட்டித் தொங்க விட்டிருக்குன்னெல்லாம் எதுக்குப் பார்க்கணும்' அப்படின்னு இன்ஸ்பெக்டர் சொன்னாரு. 'சரி, ஒரு பத்துப் பேராப் போயி அதை எடுத்து எறியலாம்'னு முடிவு செஞ்சோம். பட்டப் பகல்லே எல்லாருக்கும் தெரியும்படியா பொறுப்பானவங்க நாலு பேரை முன்ன வெச்சுக்கிட்டு இதைச் செஞ்சாத்தான் சரியா இருக்கும். இல்லேன்னா வெறும் கோஷ்டித் தகராறு மாதிரி ஆயிடும். அதான் உங்க அப்பாவை இதுக்குத் தலைமையா இருக்கணும்னு கேக்கறோம்'' என்றான் வந்திருந்தவர்களில் ஒருவன்.

''அப்பா, நீங்க என்ன சொல்றீங்க?'' என்று கேட்டான் சுந்தரம்.

''எதுக்குடா இந்த வம்பெல்லாம்? அந்த இன்ஸ்பெக்டர் சொல்றது நியாயந்தானே? கோவிலுக்குப் போறவா அவா பாட்டுக்குப் போயிண்டிருக்க வேண்டியது தானே? சுவரிலே என்ன எழுதியிருக்கு, போர்டிலே என்ன எழுதியிருக்குன்னு எல்லாம் பார்த்திண்டிருப்பானேன்? உண்மையான தெய்வ பக்தி இருக்குன்னா இதை யெல்லாம் பொருட்படுத்திண்டிருக்கத் தோணாது'' என்றார் அப்பா.

'அப்பா, ப்ளீஸ், இந்த விஷயத்திலேயும் உங்களை நியாயப்படுத்திக்காதீங்க. நீங்க சொல்ற மாதிரி இப்ப சும்மா இருந்துட்டா 'முட்டாள் பசங்களா, போர்டு எழுதிப் போட்டிருக்கிறதைப் படிச்சுமா புத்தி வரலே'ன்னு கோவிலுக்குப் போறவங்க சட்டையைப் பிடிச்சு இழுக்கிற நிலைமைதான் வரும். நீங்க சாமர்த்தியசாலிதான். ஆனா பெருந்தன்மைங்கிற போர்வையிலே கோழைத்தனத்தை மறைக்கிற சாமர்த்தியம் மட்டும் வேண்டாம்' என்று சொல்ல சுந்தரத்துக்கு நாக்குத் துடித்தது. சிரமப்பட்டு அதை அடக்கிக் கொண்டு வந்தவர்களிடம் சொன்னான்:

''அப்பா வரமாட்டேங்கிறாரேன்னு கவலைப்படாதீங்க. அவருக்குப் பதிலா நான் வரேன். போலீஸ் கமிஷனர் கிட்டே போவோம். இப்படி எழுதி வைச்சிருக்கிறது எங்க மனசைப் புண்படுத்தறது. உடனே அதை எடுக்கணும். இல்லேன்னா அதை எடுக்கிற வரைக்கும் அதன் கீழேயே உக்காந்து மறியல் பண்ணுவோம்னு எழுதிக் குடுப்போம். அதுக்கப்புறம் என்ன நடக்கிறது பார்க்கலாம்...''

---

## பேச்சிலர் என்றால் என்ன?

கல்யாணமாகாத ஒரு பெண்ணும் கல்யாணமாகாத ஓர் ஆணும் பேசிக்கொண்டாலர் பேசுமே. கல்யாணமாகாத பெண்ணுடன், கல்யாணமாகாத ஆண் பேசாமல் இருப்பதால்தான் ''பேச்சிலர்'' என்ற வார்த்தையே வந்தது. அதனால்தான் ஆங்கிலத்தில் கூட கல்யாணமாகாதவர்களை Bachelor என்கிறார்கள்!

—இரா சுகுமாரன்
வாரியாரின் சொற்பொழிவிலிருந்து

---

# வலியிலிருந்து விரைவில் நிவாரணம் பெறவே




# புதிய அனஸின்

GM-1-82 TM

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

உலகெங்கும் டாக்டர்கள் மிக் அதிகமாக சிபாரிசு செய்யும் வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது புதிய அனஸின். தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ, முதுகு வலி, தசைவலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது. அனஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்

இப்போது பாதுகாப்பான புதிய உறையில்.






இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து

*ட்ரேட் மார்க் உரிமை பெற்று உபயோகிப்பவர்கள் : ஜெஃப்ரி மேனர்ஸ் & கம். லிமிட்.

# (வட)கிழக்கே போகும் ரயில்!

ரயில் பெட்டிகளின் மேலே பயணம் செய்யும் அளவு கூட்ட நெரிசலைப் பார்த்திருக்கலாம். ரயில் சக்கரங்களுக்கிடையே பாட்டரி பெட்டி வைக்கும் இடத்தில் குந்தியபடி பெட்டிக்கு ஏழு பேர் பயணம் செய்வதை எங்கே காணலாம்?



வட கிழக்கு ரயில்வேயில்!

டயம்ஸ் ஆப் இந்தியா நிருபர் பி.சி. காந்தி தரும் தவகல்கள் மேலும் சில:

- முதல்வகுப்பில் ரிசர்வ் செய்துவிட்டதற்காக நிம்மதியாக இருக்க வேண்டாம். நீங்கள் ரிசர்வ் செய்த இடத்தில் ஏற்கனவே பத்துப் பேர் இருக்க, நீங்கள் நின்றுகொண்டே பயணம் செய்யலாம்!

- வடகிழக்கு எல்லே ரயில்வேயில் மட்டும் சென்ற 24 ஆண்டுகளில் இருபத்தாறு ஜெனரல் மானேஜர்கள் மாறியிருக்கிறார்கள். இவர்களில் சிலரின் பதவிக் காலம் 6 நாட்கள் முதல் 6 வாரங்கள் வரைதான்! இந்தப் பதவி ஒரு தண்டனை என்றே கருதப்படுகிறது. இப்போதைய ஜெனரல் மானேஜர் கே. டி. வி. ராகவன்.

- அஸ்ஸாம் கலவரங்களின் முதல் பெரிய பலி ரயில்வேதான். 1981 முடிய கடந்த நான்கு ஆண்டுகளில் ரயில் விபத்துக்களில் இறந்தவர்கள் 1584 பேர்; பலமாகக் காயமுற்றவர்கள் 4673 பேர். இந்த விபத்துக்களில் சேதமுற்ற ரயில்வே சொத்தின் மதிப்பு ரூ. 33.21 கோடி.

- ஓடும் ரயிலில் கொள்ளை என்பது சர்வ சாதாரணமாகி விட்டது. ஆண்டுக்கு ஆண்டு அதிகமாகியும் வருகிறது. (1979ஆம் ஆண்டில் 253 கேஸ், அடுத்த ஆண்டுகளில் 351, 370 என்று ஏறுமுகம்.)' ரயில்வே போலீஸ் எண்ணிக்கை மூன்று ஆண்டுகளில் 40 ஆயிரத்திலிருந்து 65 ஆயிரமாக உயர்ந்தது.







- ரயில் பெட்டியில் எதைத்தான் கொள்ளையடிப்பது என்று விவஸ்தை இல்லை. விளக்கு பல்ப், மின் விசிறி, வாஷ் பேஸின்... இரும்பு அலுமினியப் பொருள் எதுவானாலும் உருவி எடுத்துக்கொள்ளும் கூட்டம் இருக்கிறது. முதல் வகுப்புப் பெட்டியில் ரெக்ஸைன் உறையைக் கத்தரித்து வெறும் சணல் பஞ்சை விட்டு வைக்கும் மகானுபாவர்கள் உண்டு. பாட்டரி, டைனமோ, இவற்றை வைக்கும் பெட்டிகளின் இரும்பு மூடிகள் என்று எல்லாம் மாயமாய் மறைகின்றன. ரயில் பெட்டிகளை அவசரத்தில் நிறுத்தப் பயன்படும் 'பிரேக் பிளாக்' என்னும் இரும்புச் சாதனத்தின் மீது சில திருடர்களுக்கு ஒரு கண். 20 கிலோ எடையுள்ள இந்த இரும்பு சாதனத்தை அரை நிமிட நேரத்தில் கழற்றும் ஆற்றல் படைத்தவர்கள் அவர்கள்! இதனால் பயணிகளுக்கு எவ்வளவு பெரிய ஆபத்து என்று தெரிந்துதான் செய்கிறார்கள்.

- கிழக்கு ரயில்வே பாதை ஓரம் நெடுக சிறு தொழில் நிலையங்கள் (ரோலிங் மில், பவுண்டரி போன்றவை) நிறைய புதிதாக முளைத்துள்ளன. ரயில்வேயில் திருடிய உபகரணங்களின் உபயம்!

- டி. எஸ். வி.

# 27

ஒரு வழியாகத் தன் உணர்வுகளைக் கட்டுப் படுத்திக் கொண்டு பூஜை அறைப் படங்களுக்கு வைக்கச் சில ஜவ்வந்திப் பூக்களைக் கிள்ளி எடுத்துக் கொண்டு அவள் உள்ளே வந்தாள். கிரிதரன் டிபன் சாப்பிட்டுவிட்டு முற்றத்தில் இறங்கிக் கைகழுவிக் கொண்டு நின்றான்.

''உங்களுக்காகக் காத்திருந்தேன். அத்தையம்மா வற்புறுத்தினதால் சாப்பிட்டு முடித்து விட்டேன்.''

''மன்னிக்கவும்....'' — அவள் காட்டிய அசட்டையைப் பொருட்படுத்தாதவனாக லேசாகச் சிரித்தான் கிரிதரன்.

அவள் கோபத்தைக் கண்டுகொள்ள மறுக்கும் இந்த மனிதனை அவள் இன்னமும் எந்த வகையில் அசட்டை செய்து அவமானப் படுத்த இயலும்?

''எனக்குப் பசிக்கலே. ராத்திரி ஒரேயடியாகச் சாப்பிட்டுக்குவேன். நீங்கதான் பாவம் வெகுதூரம் மறுபடியும் போயாகணும். அதனால் சொன்னேன்'' சமாளித்தபடி பூஜையறைக்குள் மறைந்து கொண்டாள். விளக்கை ஏற்றிவிட்டுப் பூக்களைப் படங்களுக்கு வைத்த போது அவளது கரம் நடுங்கியது. நெஞ்சு படபடத்தது. மூச்சு முட்டியது. மெல்ல அவள் வெளியே வந்தபோது இன்னமும் அவன் அவளுக்காகக் கூடத்தில் காத்துக் கொண்டு நிற்பதைக் கண்டு திடுக்கிட்டுப் போனாள்.

''பம்பாயிலிருந்து உங்கள் இருவருக்கும் இதை வாங்கிக் கொண்டு வந்தேன். அக்கா வீடு கொலாபாவில் இருக்கு. வீட்டுக்கருகே மானசரோவர்என்ற பிரபலமான மிட்டாய்க் கடை இருக்கு. அதில் தயாரிக்கும் ஹல்வா ரொம்ப பிரசித்தமானது அதனால் கொஞ்சம் அல்வா வாங்கிட்டு வந்திருக்கேன்.'' என்றபடி ஒரு சதுரமான சிறு அட்டைப்பெட்டியை அவள் முன் நீட்டினான்.

வீட்டு வாயிலைத் தாண்டி உள்ளே வந்து விட்டான். அவள் காட்டிய அசட்டையைப் பாராட்டாது புன்னகையுடன் பேசத் துணிந்தான்.

இதற்கு மேலும் மரியாதை இன்றி வெடித்து விழுந்தால் அவன் வகிக்கும் ஆசிரிய பதவிக்கு அவமானமாயிற்றே?



'அக்கா பார்த்து வைத்திருக்கும் பெண்ணைக் கட்டிக் கொள்ள அங்கே தலையசைத்து விட்டு அந்த மகிழ்ச்சியைக் கொண்டாட எங்களுக்கு இனிப்பு வழங்குகிறீர்களா?' கேட்கத் துடித்த வார்த்தைகளை விழுங்கிக் கொண்டான்.

''நன்றி!'' —முறுவலித்தபடி பெட்டியைவாங்கி மேஜை மேல் வைத்தான். முற்றத்தில் படிந்திருந்த வெளிச்சம் மங்கி இருள் பரவத் தொடங்கியது. கூடத்துக் குத்துவிளக்கை ஏற்றினுள். பனிச் சென்று விளக்கு உமிழ்ந்த வெளிச்சத்தில் முதல் முதலாக அவளை இப்போதுதான் பார்க்கிறவன் போல் காலோடு தலைவரைத் தன் பார்வையை ஓட விட்டுப் பிரமிப்பில் கல்லாய்ச் சமைந்துபோய் நின்று கொண்டிருந்தான் அவன்.

''தொலை தூரம் போகணுமே தம்பி? இருட்டிப் போச்சு...'' மென்று விழுங்கினுள் அத்தை ஜெகதா.

''இன்று நான் என் கடைத் தெரு கிளினிக்கிலேயே தங்கிவிடப் போகிறேன். ஊருக்குப் போனதில் அங்கே கவனித்துச் சீராக்க வேண்டிய சில முக்கிய காரியங்கள் இருக்கு.''

''அப்படின்னு காலையில இங்கே காப்பி பலகாரத்துக்கு ஒரு நடை வந்து போகலாம் இல்லையா?...'' சந்தியாவின் முகத்தை ஓரக்கண்ணுல் பார்த்தபடி மெல்லிய குரலில் கேட்டாள் ஜகதா.

''இல்லை. விடிந்ததுமே எழுந்து பூதஊருக்குப் போக வேண்டியிருக்கு. பாலி கிளினிக்கிலும் எனக்குக் கொஞ்சம் வேலைகள் இருக்கு. அதனுல் அப்படியே புறப்பட்டுப் போயிடுவேன்'' என்றுன்.

நிம்மதியாக மூச்சு விட்டாள் சந்தியா.

மறுபடி அவன் காலை வேளைகளில் அவர்கள் வீட்டுக்கு வருவதையும், பின்னர் அவளைத் தன் காரில் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துச் செல்ல வற்புறுத்துவதையும் தவிர்க்க அவன் பெரிதும் விரும்பினுன்.

''வரட்டுமா?....'' என்று கூறி விடை பெற்றுக் கொண்டு உற்சாகத்துடன் தன்னைக் கேட்டுவரை தொடர்ந்து வந்த லாம்சனைத் தட்டிக் கொடுத்துவிட்டுப் புன்னகைத்தபடி தலையை ஆட்டிக் கொண்டு காரில் அவன் ஏறிக் கொண்டு விரைவில் மறைந்து போனுன்.

அதற்குப் பின் படுக்கும் வேளை வரை அத்தை ஜகதா வாயைத் திறக்கவேயில்லை.

''அந்த ஹல்வாவைக் கொஞ்சம் வாயில் போட்டுப்பார்த்தியா...''கேட்டபடி அத்தை கூடத்தில் விரித்துப் போட்ட பாயின் மீது உட்கார்ந்தாள்.

''நீங்களே சாப்பிட்டுப் பாருங்க... எந்த

# சாதாரண மனிதன்

## 'லக்ஷ்மி'

வெற்றியைக் கொண்டாட நாம இப்போ சாப்பிடணும் சொல்லுங்க...'' காரமாக சந்தியா கேட்டதும் அத்தை எழுந்து அந்தப் பெட்டியை எடுத்துச் சமையலறையிலிருந்த வலது அலமாரியில் பத்திரப்படுத்தி விட்டு வந்தாள். பட்டென்று சந்தியாவுக்குப் பதில் சொல்லாவிட்டால் மனம் அமைதியடையாது போன்றதொரு ஆதங்கம் அவளுக்கு.

''ஆனாலும் நீ அந்தப் பிள்ளையாண்டானை ரொம்ப அவமானப்படுத்திட்டே. என் மனம் ரொம்ப வேதனைப்படறது...'' ஆரம்பித்தாள் ஜகதா.

''அவர் என்னை அவமானப்பட வச்சிருக்கிறதைவிடவா அத்தை?''

''உன் பள்ளிக்கூடத்து வாத்தியார் அம்மாக்கள் தவறாகப் புரிஞ்சு கொண்டு பேசினா அந்தப் பிள்ளை என்ன செய்வான் பாவம்!''

''பாவமா?... இந்த மாதிரி நிலை உருவாகும் என்பது டாக்டருக்குப் படித்தவருக்கு தெரியாதா? அப்படி ஒரு நிலையை உண்டாக்கிவிட்டுப் பலபேர் பேசக்கு என்னை ஆளாக்கிட்டு பம்பாய் போய் மறைந்து கொண்டிருந்து விட்டு இப்போ வந்து நின்னால் என்ன அர்த்தம்?''

''நல்ல காரியத்துக்கு அறிகுறின்னு அர்த்தம்!''

''அப்படி நீங்க நம்பிக் கொண்டு இருங்க. எனக்கு அப்படிப்பட்ட நம்பிக்கைகள் ஏதும் இல்லை.''

''ஏன் இப்படி ஏடா கூடமாப் பேசறே... ஆத்திரப்படறே?''

''என்னை ஏமாளின்னு நினைச்சு வேடிக்கை காட்டறவங்களைப் பார்த்து ஆத்திரப்படாம ஆசைப்படச் சொல்றீங்களா? அத்தை! நான் நினைச்சதெல்லாம் நடக்கப் போறதில்லே... அதனாலே கற்பனைக் கோட்டைகளைக் கீழே இறக்கி வைச்சுட்டு நான் எடுக்கப் போற முடிவுக்குப் பூரண ஆதரவு கொடுக்க போதும்.''

''நீ என்ன முடிவு எடுக்கப் போறேன்னு எனக்கென்ன தெரியும்?''... அத்தை கோபமும் துயரமுமாகக் கேட்டாள்.




''இரண்டு பேருக்கும் பயனுள்ளதொரு முடிவு எடுக்கத் தீர்மானிச்சுட்டேன். எத்தனையோ பாடு பட்டோம். ஆனால் கையில் காசில்லாமல் மனிதத் துணை இல்லாமல் நாம் இருவரும் இந்த வீட்டை இனியும் கட்டிக் கொண்டு சமாளிக்க முடியாதுன்னு நல்லாவே புரிஞ்சு போச்சு....''

அத்தை விருக்கென்று நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

''இத்தனை நாள் எப்படியோ காலத்தை ஓட்டிவிட்டோமே இப்போ உனக்கு ஏன் வீட்டைப் பத்தி திடுதிடுப்புன்னு கவலை வந்திருக்கு?''

''அக்கா உஷா சொன்னபடி இந்த வீட்டை ஒரு நல்ல விலைக்கு வித்துவிடத் தீர்மானிச்சுட்டேன். நமது கட்டட வேலையாட்களிடம் கேட்டேன். இப்ப இருக்கிற விலைவாசியைக் கணக்கிட்டால் நமக்கு ஒரு கணிசமான தொகை கிடைக்குமாம்...''

எச்சிலை விழுங்கிக் கொண்டாள் ஜகதா. திடீரென்று இந்தப் பெண்ணுக்கு என்ன வந்து விட்டது? அன்று சகோதரியிடம் அப்படி தர்க்கித்தவள் இன்று இப்படி மாறிப் போகிறாளே? ''இந்தக் கூடத்திலேயே என் அண்ணன் உயிர்விட்ட இந்த இடத்திலே படுத்து நானும் அப்படியே போய்ச் சேர்ந்துடணும்னு நினைச்சுட்டிருந்தேன்....'' அழுமாட்டாக் குறை ஜகதாவுக்கு.

''எனக்கும் இந்த வீட்டின் மீது ரொம்ப ஆசைதான் அத்தை. அப்பா பார்த்து. தொட்டு யோசித்துக் கட்டிய வீடு இது. அந்த ஒரு நினைவுக்காக நானும் எத்தனையோ பாடுபட்டு விட்டேன். வீட்டின் பிரச்னை ஒன்றின் பின் ஒன்றாக பூதமாக உருவெடுத்துப் பயமுறுத்தும்போது இதை விற்றுவிடுவதைத் தவிர வேறு வழியில்லை''

''பிறகு?'' என்றாள் அத்தை விரக்தி நிறைந்த குரலில்.

''பிறகு என் வேலையை ராஜிநாமாச்செய்து விடப் போகிறேன்.''

''வீட்டையும் வித்துட்டு வேலையையும் விட்டுட்டு....'' அத்தை கிலியில் காய்ந்து போன தொண்டையை நனைக்கக் கூஜாவை எடுத்துக் குளிர்ந்த நீரை வேகமாகப் பருகினாள்.

''பயப்படாதீங்க அத்தை! பணத்தை எடுத்துக் கொண்டு நாமிருவரும் பட்டணம் போய்விடுவோம். பக்கத்து வீட்டுக்காரர் என்ன செய்கிறார் என்று வேவு பார்த்து அலைகிற தொல்லை அங்கே கிடையாது. அவரவர் கஷ்டம் அவரவர்களுடையதுன்னு பட்டும் படாமலும் ஒட்டியும் ஒட்டாமலும் வாழ்கின்ற மக்களின் நடுவே போய் நாம் புதிதாக வாழ்க்கையைத் தொடங்குவோம்..என் சிநேகிதி ஒருத்தி அங்கே இருக்கிறாள். அவளுக்குக் கடிதம் போடப் போகிறேன். வீடு கிடைக்கும்வரை நாம் ஒரு ஹோட்டலில் தங்கிக்கொள்வோம். வீட்டை வித்த பணத்தின் வட்டி நமக்கு வாழ்க்கை கொடுக்கும். பிறகு வீட்டைத் தேடிக் கொண்டு குடியேறுவோம். அங்குள்ள பல தனியார் பள்ளிக்கூடங்கள் எதிலாவது முயன்றால் வேலை கிடைக்காமல் போகாது...''

''அப்போ இந்தப் பையன் ஸ்ரீதரன்?''— அத்தை தயக்கமாக அவளைப் பார்த்தாள்.

''அவர் யார்? நாம் யார்? நாமே இல்லாத கற்பனை யெல்லாம் எதுக்குச் செய்துகொண்டு மனம் உடைஞ்சு போகணும்?''

''எனக்கு என்னவோ இன்னும் நம்பிக்கை இருக்கு சந்தியா!''

''எனக்கு நம்பிக்கை இல்லே அத்தை!''— பட்டென்று பதில் அளித்து விட்டுக் குழல் விளக்கை அணைத்து விடி விளக்கை எரிய விட்டு விட்டுப் படுக்கை மீது சாய்ந்து விட்டாள்.

அத்தை ஜகதா அவளைத் திரும்பிப் பாராது சுவரின் பக்கமாக ஒடுங்கிக் கொண்டு படுத்திருந்தாள். ஆனாலும் சந்தியா லேசாக விசும்புவது அவள் காதுகளில் துல்லியமாகக் கேட்டது.

''வருத்தப்படாதே சந்தியா!'' என்று அவள் முதுகை ஆதரவுடன் பற்றித் தேற்ற வேண்டும் போன்ற அவா எழுந்தது.

என்ன சொல்லித் தேற்றுவது? எந்த நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டு ஸ்ரீதரனுக்காக அவள் வாதாட முடியும்?... நெஞ்சு விரிந்துவிடும்போல வேதனை இறுக்குவதை உணர்ந்து தவிப்புடன் தலையணை மீது முகத்தை அழுத்தமாகப் பதித்துக் கொண்டாள். 'ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் செய்து வைப்பது என்பது எத்தனை சிரமமானதொரு காரியம்? அடக் கடவுளே!'

மறுநாள் பள்ளிக்கூடம் போகும் முன் சந்தியா பூதலூர் கடைத் தெருவிலிருந்த ஒரு விளம்பர ஏஜன்சிக்குச் சென்று பிரசித்தி பெற்ற நாளேடு ஒன்றின் ஞாயிறு வெளிவரும் பதிப்பில் விற்பனைப்பகுதியில் தங்கள் வீடு விற்பனைக்கு இருப்பதாக ஒரு விளம்பரம் போட ஏற்பாடு செய்து விட்டு உண்டான தொகையைக் கட்டிவிட்டு வெளியேவந்தாள்.

தெருவைப் பார்க்க முடியாது கண்களில் நீர் முட்டிக் கொள்வதை உணர்ந்தாள்.

பல ஆண்டுகள் அதில் வசித்த ஒரு பாதிப்பு—நெருங்கிய ஒரு உறவினரை இழக்கப் போவது போன்றதொரு பலத்த துயரம் வீட்டை விற்கப் போகிறோம் என்று நினைக்கும்போதே நெஞ்சை அடைத்துக் கொண்டு விட்டதை அறிந்தாள். ஓவென்று வாய் விட்டு அழவேண்டும் போன்றுதான் மனம் அலை பாய்ந்தது. அப்பாவின் பேரிழப்பைச் சகித்துக்கொள்ளவில்லையா? காலப் போக்கில் இந்த இழப்பையும் மறந்து விடுவோம். தன்னையே சமாதானப் படுத்திக் கொண்டு தெருவில் இறங்கி நடந்தாள்.

பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் தலை முழுகி வேறு ஆடை அணிந்துகொண்டு அவள் கோவிலுக்குப் புறப்பட்டாள்.

யாரும் தரமுடியாத ஒரு மன அமைதியை அவள் அங்கேதான் தேட முடியும் போன்றதொரு நினைத்தில் அத்தையிடம் உத்தரவு பெற்றுக் கொண்டு தேங்காய் பழத் தட்டுடன் கிளம்பி விட்டிருந்தாள்.

அனேகமாகவரர் கோவிலில் அன்று கூட்டம் அதிகம் இருக்கவில்லை.

''அர்ச்சனையா? யார் பேரில்... சுவாமி பேரிலேயே செய்துடட்டுமா?'' கேட்டபடி அர்ச்சகர் மகிழ்ச்சியுடன் அவளிடமிருந்து தட்டை வாங்கியவர் திரும்பினார்.

''அடடா! இதென்ன அதிசயம்! டாக்டரையும் அர்ச்சனை பண்ண வராப்பல இருக்கே...'' உற்சாகமாகக் கூவினார்.

''நல்லதொரு முடிவெடுக்க இறைவன் ஆசியைக் கோரி வந்திருக்கிறேன். பகவான்—அம்பிகை இவர்கள் பேருக்கு அர்ச்சனை செய்துடுங்கோ...'' என்றபடி தான் சுமந்து வந்த தேங்காய் பழக் கூடையை அவரிடம் நீட்டினான் ஸ்ரீதரன்.

கடைக்கண்ணால் அவனை ஊன்றிப் பார்த்தாள் சந்தியா. அவள் நெஞ்சுபடபடவென்று துடிக்கத் தொடங்கியது.

தலைமுழுகிவிட்டு... பட்டுக் கரை வேட்டியும் ஜிப்பாவுமாக நெற்றியில் பட்டையாக விபூதிக் கீற்றுகளுடன் அவனும் அர்ச்சனை செய்ய அங்கு வந்திருந்தான்.

''பூதலூர்ப் பள்ளிக்கூடத்தில் முதலாகச் சந்தித்தோம் என்றாலும் இந்த ஊருக்கு வந்த பின் முதல் முதல் உங்களை இந்த சுவாமி சந்நிதியில்தான் சந்தித்தேன். அது ஒரு அதிசயமான நிகழ்ச்சி!...'' மெல்லிய குரலில் சொன்னான் ஸ்ரீதரன்.

'கடைசியாக நமது சந்திப்பு இந்தக் கோவிலில் நிகழ்வது அதைவிட அதிசயம்''.... சொல்லத் துடித்தாள் சந்தியா.

அர்ச்சகர் உரத்த குரலில் அர்ச்சனையைத் துவக்கிவிடவே அவள் தலையையசைத்துவிட்டு மௌனமாகக் கர்ப்பக் கிரகத்திற்குள் பார்வையை ஓட விட்டாள்.

அர்ச்சனையை முடித்துக் கொண்டு வெளியே வந்தவளிடம் அவசரமாக ஸ்ரீதரன் ஓடிவந்தான்.

''காரை கோவிலுக்கு முன்னால் ஒரு ஒதுக்குப்புறமாக நிறுத்தியிருக்கேன். ஏறிக்கோங்க வீட்டில் கொண்டு வந்து விட்டுடறேன்''... குழைந்தான்.

''கோவிலுக்கு நடந்து வந்து பிரார்த்தித்துக்கொண்டு வீட்டுக்கு நடந்து போவதாக ஒரு விசித்திரமான வேண்டுதலை... மன்னிக்கவும்....'' திரும்பிப் பாராது அவள் மேலே நடந்தாள். ஆனால் கண்களிலிருந்து கன்னத்தின் மீது வழிந்த கண்ணீரை அவளால் கட்டுப்படுத்த இயலவில்லை. (தொடரும்)

**புள்ளி விவரம்**

1980ல் டெல்லி போலீஸ் 394 இளம் மனைவிகள் தீக்குளித்து இறந்திருப்பதாகப் பதிவு செய்துள்ளது. —பாத்திமுத்து





# கல்கி

சந்தா விவரம்

★

| | ஓராண்டு | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 60 | ரூ. 30 |
| இலங்கை (இந்திய நாணயப்படி) | ரூ. 70 | ரூ. 35 |
| இதர வெளிநாடுகள் (கப்பல் தபால் மூலம்) | ரூ. 140 | ரூ. 70 |

**மானேஜர்**

கல்கி, சென்னை-600032



Mail P. S. தேசிகாச்சாரி (Late) அவர்களின் பௌத்திரியும் Broke Bond India, Cuddalore P. D. சீனிவாசன் அவர்களின் ஜேஷ்ட குமாரத்தியுமான சௌபாக்கியவதி கீதாவிற்கும், கோட்டச்சேரி வங்கிபுரம் ரகுநாத அய்யங்கார் ஜேஷ்ட குமாரன் சிரஞ்சீவி வாசுதேவன் (Madras Atomic Power Energy, Kalpakkam) அவர்களுக்கும் 23-6-82 அன்று திருமணம் சென்னையில் மிகச் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள்!

# வித்தியாசமான "நிஜங்கள்"



தமிழ்ப் பட உலகில் அத்தி பூத்த மாதிரி யாராவது ஒருவர் வித்தியாசமான கோணத்தில் படம் எடுக்க முன்வருவார்கள். கே.எஸ். சேதுமாதவன் இயக்கி கே. எஸ். ஆர். மூர்த்தி தயாரித்து வரும் ''நிஜங்கள்'' நிஜமாகவே ஒரு அத்திப்பூ.

● வித்தியாசமான பிரச்னைக் கதை ஒன்றைத் தாங்கள் ''நிஜங்கள்'' என்னும் பெயரில் படமாகத் தயாரிக்கிறீர்களாமே?

கே. எஸ். மாதவன்: ஆம்! கேரளத்தில் கடந்த இரண்டு ஆண்டு காலமாக நடிக்கப்பட்டு வரும் நாடகக் கதை இது. தோப்பில் பாசி எழுதியது. நாடகத்தின் பெயரே விசித்திரமானது. ''கையும் தலையும் புறத்திடறது'' ''கையையும் தலையையும் வெளியே நீட்டாதீர்கள்'' எனப் பொருள்.

● எந்த மாதிரிப் பிரச்னையை அதில் கையாண்டிருக்கிறார் ஆசிரியர்?

சேது: சுதந்திரம் கிடைத்து 35 ஆண்டுகள் ஆகின்றன. அது கிடைப்பதற்காகப் பாடுபட்ட பெரியவர்களின் லட்சியக் கனவுகள் எந்த அளவு நிஜங்களாக மாறியுள்ளன என்பதை விளக்கும் கதை இது.

ஒரு குக்கிராமத்திலிருந்து முதன் முறையாக ஒரு பஸ் சென்னையை நோக்கிப் புறப்படுகிறது. வழியில் கண்டக்டருக்கும் ஒரு பிரயாணிக்கும் தகராறு ஏற்பட்டு பஸ் பாதி வழியில் நின்று விடுகிறது.

பிரயாணிகள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பிரச்னை. ஒரு பெரியவர் தம் பேத்தியை அழைத்துக் கொண்டு வேலைக்கான பேட்டிக்குப் போகிறார். நோயாளிக் குழந்தையைப் பார்க்க ஒரு தாய் கவலையோடு அமர்ந்துள்ளார். பிரசவத்துக்காக ஆஸ்பத்திரிக்குப் புறப்படும் ஓர் இளம் பெண் பிரசவ வலி கண்டு துடித்துக் கொண்டிருக்கிறாள். தப்பி ஓடிய கைதியைப் பாதுகாப்புடன் அழைத்துச் செல்லும் பொறுப்பில் இரண்டு போலீஸ்காரர்கள் தவிக்கிறார்கள். இப்படியாக ஒரு நிருபர், ஒரு பாட்டுப் பாடும் குழுவினர், அரசியல்வாதி, சாஸ்திரி, கல்லூரி மாணவர்கள் இப்படிப் பலதரப்பட்டவர்கள்.

யார் என்ன சொல்லியும் பஸ்ஸை அங்கிருந்து நகர்த்த மறுக்கிறார் கண்டக்டர். பாதை வழி மறிக்கப்படுகிறது. காரும் பஸ்ஸும் அணி அணியாக நின்று விடுகின்றன. இதில் ஒரு அரசியல்வாதி தலையிட்டு அதிகாரிகளைத் தேடுகிறார். அவர்களைப் பிடிப்பது அவ்வளவு சுலபமா?

கடைசியில் பிரச்னை தீர்ந்து பஸ் புறப்படும்போது க்ளைமாக்ஸ் வருகிறது. அதை இப்போது சொன்னால் கதையில் உள்ள சுவை குறைந்துவிடும்.

கே. எஸ். ஆர். மூர்த்தி: இது கதையின் மேலோட்டம். இதை அடிப்படையாக வைத்துக் கொண்டு கதையை வளர்க்கும் போது யார் யார் அவர்களுடைய பொறுப்புக்களை எப்படித் தட்டிக் கழிக்கிறார்கள்; சுயநலத்துடன் நடந்து கொள்கிறார்கள்; மற்றவர்கள் சுதந்திரமாகச் செயல்பட இடையூறாக இருக்கிறார்கள் என்பதை யெல்லாம் சுட்டிக் காட்டியிருக்கிறோம்.

● எடுத்துக் காட்டப்பட்ட பிரச்னைகளுக்குத் தீர்வு சொல்லியிருக்கிறீர்களா?

சேது: நாட்டு நடப்புக்களைத் தெளிவுபடுத்தியுள்ளோம். அதைப் பார்க்கும்போது தீர்வு தானாகப் புரிந்து விடும்.

● யார்யார் இதில் நடித்திருக்கிறார்கள்?

சேது: இப்படத்தைப் பொறுத்த வரையிலும் கதாநாயகன், கதா நாயகி கிடையாது. படத்தில் இடம்பெறும் 47 நட்சத்திரங்களுக்கும் கதையில் முக்கியத்துவம் உண்டு.

● பரீட்சார்த்த படமாக இதுஅமையுமா?

மூர்த்தி: அப்படிப்பட்ட படம் அல்ல. கமர்ஷியல் படம்தான். நாங்கள் எடுத்துக் கொண்ட கருத்தைப் படத்தில் சொல்லியிருக்கும் விதம் புதுமையாக இருக்கும். சிரிக்க வைத்தே சிக்கல்களைச் சொல்லியுள்ளோம். மூன்று பாடல்களும் படத்தில் உள்ளன.



# ஐ

## அகர வரிசைப் பேட்டி: அனுமந்து

**ஐந்து:**

என்னுடைய நான்கு எழுத்துப் பெயரை (அனந்து) டைரக்டர் பாலசந்தர் ஐந்து எழுத்துப் பெயராக (அனுமந்து) மாற்றி வைத்த பிறகுதான் நானும் ஒரு நடிகனாக சினிமா உலகில் மதிக்கப்பட்டேன். அப்படி அறிமுகமான முதல் படம் ''நிழல் நிஜமாகிறது'

**ஐஸ்:**

'சிம்லா ஸ்பெஷல்' படத்தில் ஒரு காட்சி எடுக்கப்பட்டது நினைவுக்கு வருகிறது. மைனஸ் பத்து வெப்ப நிலை உள்ள பனிமலையில் என்னை வெறும் நிஜாரோடு நிறுத்தி மற்றவர்கள் பனிக் கட்டிகளை அள்ளி அள்ளி வீசியதோடு கீழே விழுந்து புரள வைத்தும் காட்சி எடுத்தார்கள். நடுங்கிப் போனேன். இப்படி ஒரு காட்சி எடுக்க யோசனை கூறியவரே கமலஹாசன்தான்.

**ஐ. எஸ். ஆர்.**

என் முதல் நாடகம் 'ஏமாளி'யில் இவருடன் சின்ன வேடத்தில் வந்தேன். ஐம்பதாவது நாடகத்தில் ஐ. எஸ். ஆருக்குப் பதிலாக நான் நடித்தேன்.

**ஐயம்:**

காட்சியைப் படமாக்கும்போது அது படத்தில் இடம் பெறுமா, பெறுதா என்கிற ஐயம் எனக்கு எழுவதுண்டு. 'நன்றி மீண்டும் வருக' படத்தில் சீரியஸான புரொபஸர் ரோல் எனக்கு. இறந்துபோன மகன் பிரதாப்பைப் போன்ற சாயல் உள்ள ஒருவரைப் பார்த்து நான் தேம்பித் தேம்பி அழ வேண்டும். உணர்ச்சி பொங்க அழுது நடித்தேன். ஆனால் ஏனோ அக்காட்சி படத்தில் இடம் பெறப் போவதில்லையாம்.

**ஐயப்பன்:**

ஐயப்பன் கோவிலுக்குப் போனதில்லை. முப்பாத்தம்மன் கோவிலுக்கு அடிக்கடி போவேன். என்றாலும் மலைக்குப் போய் வந்த சரத்பாபு, தசரதன் போன்றவர்களிடம் அவர்களுடைய அனுபவத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்வேன்.

கமலஹாசன் கைகளை ஊன்றுமலேயே அம்பிகாவைச் சுமக்கும் இக்காட்சி இடம்பெற்ற படம் 'சகல கலா வல்லவன்'.

இப்படத்துக்குப் பொருந்துகிற மாதிரி கமலும் அம்பிகாவும் பேசிக் கொள்ளும் சிரிப்புத் துணுக்கு ஒன்றைத் தபால் கார்டில் எழுதி அனுப்புங்கள்.

மிகச் சிறந்த சிரிப்புத் துணுக்கு எழுதியவருக்கு கமலஹாசனை நேரில் சந்தித்துப் பேச ஏற்பாடு செய்து தரப்படும். கமலஹாசனுடன் அவர் எடுத்துக்கொண்ட புகைப் படமும்; உரையாடல் விவரங்களும் 'கல்கி'யில் இடம் பெறும்.

பிரசுரமாகும் சிரிப்புத் துணுக்குகளுக்குப் பரிசு உண்டு.

சிரிப்புத் துணுக்கு அனுப்புகிறவர்கள் ''கமல் — அம்பிகா ஜோக்'' எனத் தலைப்புத் தந்து எழுதி 31-7-82 தேதிக்குள் அனுப்ப வேண்டும்.



இந்த நிலைமையும் சிரிப்பா?





# நாயக்கரின் மகள்

பதினேழாம்நூற்றுண்டில் நிகழ்ந்த சோழ வரலாற்றுக் கதை.

மன்னர் நரசிம்ம நாயகரின் ஒரே மகன் குமார நாயகர் தேவதாசி குலப் பெண் சித்ராங்கியின் நடனத்தைக் கண்டு மயங்கி, 'மணந்தால் அவளேயே மணப்பேன்: இன்றேல் முடி துறப்பேன்' எனப் பிடிவாதம் பிடிப்பதும், மன்னரின் தம்பி பூபதி நாயகர் இளவரசனைப் பட்டத்துக்கு வராமல் தடுத்து அரசு பீடம் ஏறச் சூழ்ச்சி செய்வதும் முன் கதை.

மன்னர் தேவதாசியைத் தன் மகளாகச் சுவீகாரம் செய்துகொண்டு கதையில் புதிய திருப்பத்தை உண்டு பண்ணுகிறார். பின்னர் பூபதியின் சூழ்ச்சியால் படை எடுத்துச் சண்டைக்கு வரவிருந்த சேர, பாண்டியர்களைத் தனது வாக்குச் சாதுர்யத்தால் ராணி எவ்வாறு சரணடையச் செய்கிறுள் என்பதும், திருமணமே வேண்டாம் என்று சொன்ன இளவரசரை எவ்வாறு சம்மதிக்கவைக்கிறுள் என்பதும், நாட்டையே காட்டிக் கொடுத்த துரோகி பூபதியை நாடி ஒடுங்கச் செய்வதும் பின் கதை.

முடிவு: சித்ராங்கி பூபதியால் கொல்லப் படுகிறுள். அரங்கநாயகி அம்மனின் விசேஷ பூஜைக்குரிய பட்டுப் புடவை அவளது பூத உடல் மீது சாத்திக் கௌரவிக்கப் படுகிறுள்.

வசனம் தேன் போல் இனிக்கச் செய்துள்ளார் கே.எஸ். ஜி.

அசலான தமிழ் உச்சரிப்பைப் படத்தில் வரும் அத்தனை கதாபாத்திரங்களும் பேசி நடிக்கும்போது நமக்கே உற்சாகம் மேலிடுகிறது. என்றுலும் 'ரங்கம்மாள்' சுஜாதா தன்னுடைய கதா பாத்திரத்துக்கு மெருகேற்றியது மாதிரி ஆகுமா? சமயம் அறிந்து பக்குவமாகப் பேசி நடித்திருக்கிறுர்.

நரசிம்ம நாயக்கரின் தோற்றத்துக்கு மேஜரின் உருவம் உதவியிருக்கிறமாதிரி வேறு யார் உதவக்கூடும்?

குமார நாயகராக வரும் விஜயகுமார் தேவ தாசியின் நினைவாகவே விடும் பெருமூச்சில் குளிர்ச்சி உண்டு.

சித்ராங்கி — ஜெய்சித்ராங்கியாகி நாறுவது படத்துக்கு மகுடம் சூட்டியுள்ளார்.

பூபதி நாயகராக வரும் மனேகர் நடிப்பில் கெடுபிடி உண்டு. வழக்கமான கெடுபிடி.

பட்டதாரி அசோகனுக்குச் சரித்திரப் பெயர் இருந்தால் மட்டும் போதுமா? சேர அரசன் இவரைப்போலவா கோமாளியாக இருப்பான்?

மறக்க முடியாத சுருளியும் வருகிறுர்— கொஞ்ச நேரம்.

படத்தில் சித்ராங்கி பாடுகிற மாதிரி ''என்னவென்று சொல்வேனடி'' எனக் கே. எஸ். ஜி.யைப் பார்த்துப் பாடத் தோன்றுகிறது. சரித்திரம் — அதாவது கே. எஸ். ஜி.யின் சாதனைச் சரித்திரம் திரும்புகிறது.

ராபர்ட் காச் நூற்றாண்டு

# வீழ்ந்தான், டி.பி. அரக்கன்!

ஆரம்பத்தில் அபர்ணா அந்த இருமலுக்கு ரொம்பவும் முக்கியத்துவம் தரவில்லை. சீதோஷ்ண நிலைமைதான் காரணமாயிருக்கும் என்று அலட்சியமா யிருந்தாள். ஆனால் பத்துப் பதினைந்து நாள் கழிந்த பின்னரும் இருமல் குணமாகாது, அதிகமாவதைக் கண்டு — அதுவும் இரவு நேரமானால் பயங்கர இருமல் — அவள் கணவன் டாக்டரிடம் அழைத்துச் சென்றான்.

டாக்டர் கிளினிகல் சோதனைகள் எல்லாம் செய்தார். எக்ஸ்-ரே எடுத்து வரச் சொன்னார். எக்ஸ்ரே படத்தில் வலது நுரையீரல் பக்கம் நிழல் மாதிரி தெரிந்தது. இருந்தாலும் உடனடியாக முடிவுக்கு வரவில்லை. கோழையையும் பரிசோதனை செய்யுமாறு கூறினார். அந்தச் சோதனை முடிவு பார்த்தான பிறகு தீர்ப்பை வழங்கினார்.

"உங்களுக்கு டி.பி."

அபர்ணாவின் கண்கள் நீரால் நனைந்தன. தனக்கு இவ்வியாதி என்று கேள்விப்பட்டது மாத்திரம் காரணமில்லை. ரொம்ப வருடத்துக்கு முன்பு தன் தாயார் இதே வியாதியால் சானடோரியத்தில் மரணம் அடைந்தது ஞாபகத்துக்கு வந்து மனசை வேதனை செய்தது.



சில நிமிடத்துக்குப் பின் சமாளித்துக் கேட்டாள்: "நானும் சானடோரியத்தில் அட்மிட் ஆகணுமா டாக்டர்?"

டாக்டர் ஒரு வெடிச்சிரிப்புச் சிரித்தார்.

"அம்மணி! நீங்கள் இன்னமும் பழைய மனுஷியாக இருக்கிறீர்கள். வீட்டிலிருந்து கொண்டே குணப்படுத்திவிடக் கூடிய வியாதிதான் டி. பி. முறையாகத் தொடர்ந்து கிட்டத்தட்ட ஒன்பது மாசம் மருந்து சாப்பிட்டுக் கொண்டே இருக்க வேண்டும். நல்ல பலன் கிடைக்கும்" என்றார். மறுபடி வலியுறுத்தினார்: "நோயாளியான உங்களிடம்தான் இருக்கிறது — குணம் ஆவது. ரெகுலராக மாத்திரைகளை உட்கொள்ள வேண்டும்."

டாக்டரின் வார்த்தைகள் அபர்ணாவுக்கு ஆறுதல் கொடுத்தன. இருந்தாலும் பல கேள்விகள் அவளைக் குடைந்தன. சிறு வயதில் பி. ஸி. ஜி. ஊசி போட்டுக்கொண்டாயிற்றே? ஒரே வியாதிக்கு ஏன் பல மாத்திரைகள்? ஆஸ்பத்திரியின் வசதி வீட்டில் கிடைக்குமா?

அடுத்த விஸிட்டில் டாக்டரிடமிருந்து அவளுக்குப் பதில் கிடைத்தது.

"பிறந்த உடனே போட்டுக் கொண்டதோடு சரி. மறு முறை ஊசி போட்டுக் கொண்டிருக்க மாட்டீர்கள்.

"பலவிதமான மாத்திரைகள் தேவைதான். டி.பி. நுண் கிருமிகள் பற்பல வகை உள்ளன. விதவிதமான வீர்யமும் தாக்கும் சக்தியும் கொண்டவை. அக்கிருமிகளின் வேகத்தையும் சக்தியையும் கட்டுப்படுத்த இவ்வளவு மாத்திரைகள் தேவைதான்.

"ஆஸ்பத்திரியில் இருப்பது எந்த விதத்திலும் மேலானதல்ல. சொல்லப் போனால், அந்தத் தனிமையான சூழ்நிலை உங்களுக்கு வேறு பாதிப்பை ஏற்படுத்தக் கூடும். வீட்டில் பழக்கமான சூழ்நிலையில் இருந்து குணப்படுத்துவதுதான் நல்லது. ஸீரியஸ் காம்ப்ளிகேஷனுக்குத்தான் ஆஸ்பத்திரி அவசியம்."

அபர்ணா உற்சாகம் கொண்டாள். டாக்டரின் சிகிச்சையைத் தொடர்ந்து மேற்கொள்ளலானாள். குணம் தெரிந்தது. இப்போது வேறு சந்தேகங்கள். ஏன் மறுபடியும் எக்ஸ்ரே எடுக்கவில்லை? நோய் மறுபடியும் திரும்பிக் கொண்டு விடுமோ?

இந்தத் தடவை டாக்டரைச் சந்தித்த போது அவளால் தயக்கமின்றிக் கேட்கமுடிந்தது.

"எக்ஸ்ரே படத்தை முழுமையாக நம்புவதற்கில்லை. பாக்டீரியலாஜிகல் சோதனைதான் சிறந்தது. ஐந்து அல்லது ஆறு மாதம் கழித்து மறுபடியும் உங்கள் கோழையைப் பரிசோதனை செய்தால் போதுமானது."

அந்த நோயின் சாயல் சிறிது கூட இல்லாமல் அபர்ணா இப்போது குதூகலமாக நடமாடி வருகிறாள்.

சரியாக நூறு ஆண்டுகளுக்கு முன் இக்கொடிய வியாதியை உருவாக்கும் கிருமியைக் கண்டுபிடித்தார் ராபர்ட் காச். (படம்) கிருமியை இனம் கண்டு கொண்டதால்தான் மருந்துகளைக் கண்டு பிடிக்க முடிந்தது. ஆராய்ச்சிகள் மேலும் தொடர, சிகிச்சைக்கான கால அளவு குறைந்தது. 1960ம் ஆண்டு, சிகிச்சை இரண்டு ஆண்டு காலம் நீடித்தது. 1500–3000 தடவை மருந்து சாப்பிட வேண்டும். இப்போது சிகிச்சை ஓராண்டுக்குக் கீழ். மருந்து நூறு 'டோஸ்' கூடப் போதும்!

— வாதுலன்

# நீங்கள் கேட்டவை

⌘ ராஜேஸ்வரி, திருச்சி-81 ★

? யுத்தம் செய்யாவிட்டால் இஸ்ரேலுக்குப்பொழுது போகாதா?

! ''சரியா தப்பா என்று யோசியாமல், begin என்பதுதான் Begin னுடைய லட்சியம்'' என்று கேலியாகக் கிண்டல் பண்ணுகிறது கார்டியன் பத்திரிகை. பீருட்டில் நூற்றுக் கணக்கானவர் இறந்ததும் ஆயிரக் கணக்கானவர் வீடு வாசல் இழந்ததும் அதி பயங்கரம். நாளைக்கு பி. எல். ஓ. தொந்தரவு தரும் என்று எதிர்பார்க்கப்படுவதால் அதை முன்கூட்டியே முறியடிப்பதாகக் கூறி இன்று ஒரு பாவமும் அறியாத லெபனன் மக்களைச் சித்ரவதைக்குள்ளாக்குகிறார் பெகின். இஸ்ரேலிய மக்களே இது பிடிக்காமல் ஆர்ப்பாட்டம் செய்துள்ளனர். பாலஸ்தீன விடுதலை இயக்கத்தினர் செய்த எந்தக் காரியமும் பெகினின் இந்த நடவடிக்கையை நியாயப்படுத்துமளவில் இல்லை. இந்த யுத்தத்தினால் விளையக் கூடிய அமைதி நீடித்திருக்கவும் போவதில்லை. வெறுப்பையும் வன்மத்தையும் வளர்த்தது தான் மிச்சம். இஸ்ரேல் எதைச் செய்தாலும் சரி என்று ஒப்புக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தில் அமெரிக்கா இருப்பது—அந்தோ பரிதாபம்!

⌘ கே. சங்கர், சென்னை-17

? Seems like old times-எப்படி?

! Neil Simons எழுதிய நகைச்சுவை நாடகம் எதுவுமே சோடை போனதில்லை. (Plaza suite, Bare Foot in the Park, Odd couple) கட்டிலுக் கடியிலிருந்து கைவிரல்கள் மீது படும்போதும் அந்த அவதியுடனேயே ஜாடை காட்ட, அதைப் பார்த்துக் கொண்டே அவனுடைய மாஜி மனைவி இன்றையக் கணவனுடன் பேசுகிற காட்சி — டைரக்டரின் வெற்றி. ஒரு கவலை: காப்பி அடிக்கப் புகுந்து நமது படாதிபதிகள் குட்டிச் சுவராக்காதிருக்க வேண்டுமே!

பி.கு: நீல் ஸைமன்ஸ் நாடகங்களைப் படிக்க விரும்புவோர் அமெரிக்கன் லைப்ரரியை அணுகலாம்.

⌘ என். பானு, திருச்சி

? ரப்பர் ஸ்டாம்பு வாய்ப்பு தமிழரான ஆர். வேங்கடராமனுக்கு நழுவியது பற்றி..?

! அதிருக்கட்டும் ஒரு பிராமணனுக்கு ஆதரவு தரும் வாய்ப்பு கருணாநிதிக்கு நழுவியது பற்றி...? ஜெயில் சிங் தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்தவரானதால் அவருக்கு ஆதரவு அளிப்பதில் பெருமையாம் கருணாநிதிக்கு! ஆர். வி.யை அம்மையார் நிறுத்தியிருந்தால் அப்போதும் பெருமைப்பட்டிருப்பார்! ஐயமில்லை.

⌘ ஆர். ஜெயராமன், பாண்டிச்சேரி

? 'விண்ணில் ஆப்பிள் பயிரிடுவோம்' என்று தொடங்கி, 'அந்த நிலைமை தோன்றும் போது அறிவே இங்கே சாமி என்போம்' என்று முடித்து வைரமுத்து எழுதியுள்ளார். தங்கள் கருத்து?

! அறிவை சாமி என்பதில் என்ன தடை? கலைமகளையும் தட்சிணாமூர்த்தியையும் வழிபடுகிறவர்கள் அல்லவா நாம்? விண்ணில் ஆப்பிள் பயிரிடும்வரை உயர்ந்தவர்கள் ஒரு சர்வ வல்லமை பொருந்திய சக்தியை, அறிவையெல்லாம் வென்ற ஒரு பேரறிவை ஒவ்வொரு கணமும் உணர்கிறார்கள்.

⌘ அ. முத்தும் பெருமாள், சென்னை

? ஆந்திரா தெலுங்கருக்காம்;
அஸ்ஸாம் அஸ்ஸாமியருக்காம்;
அப்படியானால் இந்தியா யாருக்காம்?

! இந்திராவுக்காம்.

⌘ பி.எல். ராஜகோபலன், பட்டுக்கோட்டை

? கிராக்கிக்கு இப்போது ஏகப்பட்ட கிராக்கி எல்லாம் பத்திரிகைகளிலும். மதிப்பு அவருடைய பதவிக்கா? அவரது எழுத்துக்கா?

! அவர் கட்டுரைகள் பெரும்பாலும் ஒரே மாதிரி Stereotype ஆக அமைவதைப் பார்க்கும்போது மதிப்பு எதற்கு என்று நான் சொல்லித்தான் ஆக வேண்டுமா?

✖ எஸ். கணேசன், திருநெல்வேலி

? டி.வி.யில் பிடித்த அம்சம் எது?

! முதலில் விம்பிள்டன் நேரடி ஒளிபரப்பு இல்லை என்றவர்கள் பிறகு அதற்கான முயற்சியைத் தளர்த்தாமல் பகுதி நேர மேனும் ஒளிபரப்பினார்களே, அது.

✖ கே.எஸ். கணபதி சுப்பிரமணியம் சென்னை

? குறள்களில் தங்களைக் கவர்ந்தது...?

! 'இதனை இதனால் இவன் முடிக்கும் என் றாய்ந்து அதனை அவன்கண் விடல்.' என்ற குறளைப் பின்பற்றி எல்லாக் காரி யங்களையும் பிறரிடம் ஒப்படைத்துவிட்டு ஹாய்யாக இருக்கலாம் என்று பார்த்தால் முடியவில்லையே!

✖ எஸ். பி. குணசேகரன், வடகாடு

? நான் உங்களைத் தமிழன் இல்லை என்கிறேன். இதை நான் வாபஸ் வாங்கும் வரை உண்ணா விரதம் இருக்களேன், பார்ப்போம்?

! யார் தடுத்தாலும் உண்ணாவிரதம் இருப் பதை இப்போதைக்கு ஒத்திப் போட் டிருக்கிறேன்.

✖ வெ. லட்சுமி நாராயணன், வடலூர்

? 'ராஜாஜி கல்கி போன்ற மேதைகளுக்குச் சமமாக சோவைத் தாங்கள் எடை போட்டிருப்பது 'லேட் டஸ்ட் ஜோக்' என்று கிட்டப்பா கூறுகிறாரே?

! "இப்படி ஒப்பு நோக்குவதே எனக்குப் பிடிக்கவில்லை" என்ற ஆரம்ப வாக்கியத் துடன் பதிலை நான் எழுதியிருக்கும்போது கிட்டப்பா எதற்காக ஒப்பு நோக்கிக் குழப் பிக்கொள்கிறார், கேளப்பா!

✖ கே. என். செல்வரத்தினம், வடகாடு

? எதை நினைத்தால் உங்களுக்கு ஆச்சர்யமாக இருக்கிறது?

! 'பால் கமிஷன் தீர்ப்பை யொட்டி நட வடிக்கை எதுவும் எடுக்க முடியவில்லை, ஆதாரம் ஏதுமில்லை' என்று போலீஸாரை விட்டுச் சொல்லச் சொல்லும் தமிழக அரசை நினைத்தால். இதை நாடு நம்ப வேண்டும் என்று அவர்கள் எதிர்பார்ப் பதை எண்ணினால். முழுப் பூசணிக்காயை சோற்றில் மறைக்க முயலும் காரியத் தைப் பார்த்தால் ஆச்சரியப்படுவதைத் தவிர வேறு வழியே இல்லை!

✖ டி. நடராஜன், தூத்துக்குடி

? மனத்திற்கும் மனச்சாட்சிக்கும் எவ்வளவு தூரம்?

! கலைஞரின் பேட்டியைக் கல்கியிலிருந்து எடுத்துப் பிரசுரிக்க மனமிருந்தது பழம் பெரும் பத்திரிகையான சுதேசமித்திர னுக்கு. ஆனால் கல்கிக்கு அளிக்கப்பட்ட பேட்டி என்று குறிப்பிட மனமில்லை. மனச் சாட்சிப்படி அது நடந்து கொண்டிருந்தால் நம் மதிப்பில் அது விண்ணளாவ உயர்ந் திருக்குமே! ஆக மனத்துக்கும் மனச் சாட்சிக்கும் இடையில் விண்ணுக்கும் மண் ணுக்கும் உள்ள தூரம் என்று தெரி கிறது.

ரூ. 10 பரிசு பெறுபவர்: ✖

திரு. வி. ராதாகிருஷ்ணன், (ராஜேசுவரி),
C-84, வடகிழக்கு எக்ஸ்டென்ஷன்,
கோட்டை ஸ்டேஷன் ரோடு,
தில்லை நகர்,
திருச்சி-18.

✖ ஆர். வி.



✖ வைரமுத்து



✖ நீல் ஸைமன்ஸ்



✖ பெகின்



# சில சுவையான கடிதங்கள்!

## ஜனாதிபதியும் திரௌபதியும்

ஜனத்தொகைப் பெருக்கத்தைத் தடுக்கும் பொருட்டு திரௌபதி ஐந்து ஆடவர்களை மணந்தாள் என்று நமது ஜனாதிபதி திரு சஞ்சீவரெட்டி கூறியிருப்பது எனக்கு மிகுந்த ஆச்சரியத்தைத் தருகிறது.

திரௌபதி ஐந்து ஆடவர்களை மணந்ததற்கு வேறு பல காரணங்களை நாம் அறிவோம். நிச்சயமாக ஜனத் தொகையைக் கட்டுப்படுத்தும் நோக்கம் அந்தத் திருமணத்தில் இல்லை. ஜனத்தொகைப் பிரச்னை முக்கியமானதொன்றுதான். ஆனால் நமது புராதன காப்பியங்களை வாய்க்கு வந்தபடி மேற்கோள் காட்டுவது நிச்சயமாக ஆட்சேபிக்கக்கூடிய விஷயம்.

பெங்களூர் — சி.வி. நரஹரி ராவ்

தகவல்: பாலசுப்பிரமணியன், பெங்களூர்

[இந்த டெக்கான் ஹெரால்ட் கடிதத்தையே 1. திருமதி ரோஸி, 2. திருமதி அனிதா ராமச்சந்திரன் 3. திரு சித்திரப்ரியா ஆகியோரும் அனுப்பியுள்ளனர். இவர்கள் நால்வர் பெயரையும் குலுக்கிப் போட்டு யார் பெயர் வருகிறதோ அவருக்குச் சன்மானம் அளிக்கப்படும். -ஆர்]

## கடிதம் எழுதுபவர்களின் (தலை)விதி

தமது கடிதத்தின் மூலம் ஆசிரியருக்குக் கருத்தைத் தெரிவிப்பவர்களின் தலைவிதியை நிர்ணயிப்பதில் பெரும் பங்கு வகிக்கும் மூன்று அம்சங்கள் வருமாறு: பத்திரிகாசிரியரின் மனநிலை (Mood) எழுதுபவரின் மீது ஆசிரியரின் விருப்பு வெறுப்பு, ஆசிரியரின் அறையில் உள்ள குப்பைக்கூடையின் கொள்ளளவு.

ஆசிரியரின் அறையில் உள்ள குப்பைக் கூடை நிரம்பி வழிந்து காணப்பட்டால், கடிதம் பிரசுரமாகும் சாத்தியக்கூறு அதிகம். இது போல பத்திரிகாசிரியரின் மனைவி அவருடைய மனநிலையைச் சீர்குலைக்காமல் அலுவலகத்துக்கு அனுப்பியிருந்தாலும் கடிதம் எழுதுபவரின் பெயர் அல்லது புனைபெயரைக் கண்டு ஆசிரியர் சீற்றம் அடையாமல் இருந்தாலும் கடிதம் பத்திரிகையில் இடம்பெற வாய்ப்பு ஏற்படுகிறது.

இவை மூன்றும் இல்லையானால் எவ்வளவு சிறந்த கருத்துடனும், நகைச்சுவை இழையோட, மற்றும் இலக்கியக் கண்ணோட்டத்துடன் நீங்கள் எழுதியிருந்தாலும் உங்களது கடிதம் பிரசுரமாகாது — வி.ஆர். ஹர்ஷன் இன்ஸ்பெக்ஷன், ரிகார்ட்ஸ்; சான்டாக்ரூஸ்

ஆசிரியரின் பதில்:

நீங்கள் கூறுவது சரியல்ல. இப்பொழுது எனது மனநிலை சீர்குலைந்துள்ளது. எனது குப்பைக் கூடையும் காலியாக உள்ளது. இருப்பினும் உங்கள்கடிதம் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

நன்றி: Air India's House Journal MAGIC CARPET Feb. March-82

தகவல்: பி.கே. சங்கர் கல்கத்தா-26

[இதே கடிதத்தையே திரு பிச்சமணியும் மொழி பெயர்த்து அனுப்பியுள்ளார். இவர்களுக்குள்ளும் குலுக்கல் முறையில் பரிசளிக்கப்படும். -ஆர்]

## பெயரில்லா ரயில் நிலையம்

இவ்வாண்டு ஜனவரி மாதம் 26ந் தேதி புதிய ரயில்வே ஸ்டேஷன் ஒன்று விம்கோ நகர் ஸ்டேஷனுக்கும் எண்ணூர் ஸ்டேஷனுக்கும் இடையில் திறந்து வைக்கப்பட்டது. இந்த ரயில் நிலையம் எண்ணூர் அனல் மின் நிலையம், அஷோக் லேலண்ட் இவற்றின் பொருளாதார உதவியுடன் அமைக்கப்பட்






டது. இந்தப் புதிய ஸ்டேஷனுக்கு கத்திவாக்கம், எரவனூர், பர்மா நகர், தெர்மல் நகர், வேலண்ட் ஸ்டேஷன், பாரதிநகர் என்று என்னென்னவோ பெயர்கள் வைக்க யோசனை கூறப்பட்டது. ஆனால் இன்னும் எந்தப் பெயரும் வைக்கப்படவில்லை.

எல்லா லோகல் ரயில்களும் இந்த ஸ்டேஷனில் நின்றாலும் பயணிகள் டிக்கட் எடுப்பதற்காக விம்கோநகர் அல்லது எண்ணூர் ஸ்டேஷனுக்கு பஸ்ஸிலோ, ரயிலிலோ (ரயிலில் சென்றால் டிக்கட் இல்லாமல்) செல்ல வேண்டியுள்ளது.

சம்பந்தப்பட்ட அதிகாரிகள் இந்த ரயில் நிலையத்துக்கு ஒரு பெயரையும் வைத்துவிட்டு டிக்கட் கொடுப்பதற்கும் ஏற்பாடு செய்யக் கூடாதோ?

தாம்பரம் ஏபல்ராஜ்
நன்றி: 'இந்தியன் எக்ஸ்பிரஸ்', 6.5.82
தகவல்: நேசன் சென்னை-61

## சீட்டாட்ட வெறி

பள்ளிப் பருவத்திலிருந்தே என்னிடம் சீட்டாட்ட வெறி இருந்தது. சதா நண்பர்களுடன் ரம்மி ஆட்டம்தான். ஒரு நாள் பாதி ஆட்டம் நடந்து கொண்டிருந்தது. என் அண்ணன் வந்து எங்கள்மாமா மஞ்சள் காமாலையில் படுத்திருப்பதாகச் சொன்னார். நானோ ஆட்ட சுவாரஸ்யத்தில் போய்ப் பார்க்காமல் இருந்துவிட்டேன்.

பத்து நாட்கள் ஆகியிருக்கும். மாமாவின் உடல் நலம் மோசமாகி, சப்தர்ஜங் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளதாக அண்ணன் சொன்னார். விரைவில் போய்ப் பார்ப்பதாகச் சொன்னேன். ஆனால் சீட்டாட்ட ஆசை போக விடவில்லை. மாமா இறந்துவிட்டார். என் வாழ்நாளில் எனக்கு அது ஒரு பேரிடி ஆயிற்று.

அவரது உடலைப் பார்த்ததும் என் இதயம் கண்ணீர் விட்டது. சீட்டாட்ட வெறியில் மாமாவைப் பார்க்காமல் ஒதுக்கி விட்டதை உணர்ந்தேன். அந்த இடத்திலேயே 'இனி சீட்டைத் தொடுவதில்லை' என்று சபதம் எடுத்தேன். 18 ஆண்டுகள் ஆகின்றன. நான் திருந்தி விட்டேன்.

புதுடில்லி ஜே.பி. நாகில் ரமணி
(1979 மே மிர்ரரில் வெளியான கடிதம்)
தகவல்: ஜானகி மணாளன் மன்னார்குடி

## எல்லோரும் டியூஷன் படிக்க முடியுமா?

சில மேல் நிலைப் பள்ளிகளில் பணிபுரியும் ஆசிரியர்களில் சிலர் ஒவ்வொரு வருடமும் சுமார் நூறு மாணவ, மாணவிகளுக்கு தங்கள் வீட்டில் டியூஷன் சொல்லிக்கொடுக்கிறார்கள். இவர்கள் வாங்கும் கட்டணம் அதிகம். வருடத் தொடக்கத்தில் வகுப்புக்களில் மாணவர்களிடம் கேள்வி மேல் கேள்வி கேட்கிறார்கள். பதில் சொல்லாதவர்களை 50, 100 முறை இம்போசிஷன் எழுதச்சொல்கிறார்கள். பிராக்டிகலில் சரியான விளக்கங்கள் கிடைப்பதில்லை. ஆனால் டியூஷன் படித்தால் இந்தத் தொல்லைகள் கிடையாது.

டியூஷன் என்றால் 2, 3 பேர்களுக்கு நடத்தினால் பயன் உண்டு. ஆனால் பள்ளி வகுப்புகளைப் போலவே கூட்டம் கூட்டமாக மாணவர்களுக்குத் தனி பாடம் அளிப்பதால் என்ன பயன்? ஒரே சமயத்தில் 50 பேர்களுக்கு டியூஷன் மூலம் பாடத்தைக் கற்றுக் கொடுக்க முடியும் என்றால் அதை ஏன் பள்ளி வகுப்புக்களிலேயே அளிக்க முடியாது?

இதை டியூஷன் நடத்தும் சில ஆசிரியர்களும், அந்த உண்மையை அறிந்தும், அறியாதது போலக் கண்களை மூடிக் கொண்டிருக்கும் பள்ளி நிர்வாகிகளும் உணர வேண்டும். டியூஷன் படிக்க வசதியற்ற ஏழை மாணவர்களுக்கு நியாயம் வழங்க வேண்டும்.

கோவை ச. ரங்கராசன்
தினமணியில் பிரசுரமானது. அனுப்பியவர்:
டி. எஸ். சீதாராமன் கும்பகோணம்



## நேரம் சேமிப்பு!

''காலையில் ஒரே சமயத்தில் என்னுடைய இரண்டு குழந்தைகளையும் பள்ளிக்கு அனுப்ப வேண்டியிருப்பதாலும், அதே சமயம் நானும் ஆபீஸுக்குச் செல்ல வேண்டியிருப்பதாலும் ஏற்படும் அவசர பரபரப்பைக் குறைக்க, என்னுடைய இளைய மகனிடம் 'காலையில் தயார் செய்ய வேண்டியவற்றை நீ இரவே செய்துகொண்டால் நேரத்தை மிச்சம் பிடிக்கலாமே' என அறிவுரை கூறியிருந்தேன். இரவு படுக்கப் போகு முன் அவனைக் கவனித்தேன். அவனும் நான் கொடுத்த அறிவுரையை நிறைவேற்றும் விதமாக இரவு பைஜாமா அணிந்து அதனடியில் முழு ஸ்கூல் யூனிபாரம் அணிந்திருந்தான்...!

போஸ்டன் திருமதி பி. பன்னகன்
டிட்பிட்ஸ் கடிதம் — அனுப்பியவர்: திருமதி
ராஜி ராதா திருச்சி-18




கமலா—வேறு யாருமில்லே, என் அருமை மனைவி கமலாதான். – வெறும் பி. ஏ. பட்டம் பெற்றதோடு நிற்காமல் சட்டப் படிப்பும் படித்துக் கறுப்புக் கோட்டும் போட்டுக் கோர்ட்டுகளுக்குப் போயிருந்தால் பால்கிவாலா வகையறுக்களை முழுங்கி ஏப்பம் விட்டிருப்பாள். சும்மா இவன் தன் மனைவியின் பெருமையைத் தம்பட்டம் அடித்துக் கொள்கிறான் என்று ருள் கொட்டும் முணுமுணு மன்னர்களே அவசரப்படாதீர்கள். முழுவதையும் படித்துவிட்டுப் பிறகு சொல்லுங்கள்.

விவாதம் என்று வந்தால் கமலா பாயிண்ட் பாயிண்டாகவும், பல சமயம் பாயிண்ட் இல்லாமலும் வெளுத்து வாங்குவாள்.: இதோ சில உதாரணங்கள்:

● ● ●

''கமலா... நாளைக்குக் காலே பத்து மணியிலிருந்து புது காஸ் கனெக்‌ஷனுக்கு பேர் பதிவு செய்து கொள்ளப் போகிறார்களாம்...''

''முதல்லே போய் உங்க பேரை ரிஜிஸ்டர் பண்ணிட்டு வாங்கோ.''

''ஒரே கூட்டமாக இருக்கும். இரண்டு நாள் போகட்டுமே.''

''கூட்டமும் இருக்காது ஒண்ணும் இருக்காது. உங்களை மாதிரி எல்லாரும் நினைச்சிண்டு இரண்டு நாள் கழிச்சுத்தான் போவார்கள். அன்னிக்குத்தான் கூட்டம் அலைமோதும். அதனால் நாளைக்கே போங்கோ.''

''சரி கமலா.''

● ● ●

''போய் அரைக் கிலோ முட்டைகோஸ் வாங்கிக் கொண்டு வாங்க... கையிலே எடுத்துப்பார்த்தா லேசா இருக்கணும். அதுதான் நிறைய நிக்கும்'' என்றாள் கமலா.

''அது எப்படி? எடை போட்டு வாங்கும் போது அரைக் கிலோவுக்கு 750 கிராம் முட்டை கோஸ் வந்து விடுமா?'' என்று நான் கேட்டேன்.

''பேத்தாதீங்கோ... அடைஞ்ச மாதிரி இருக்கிற முட்டைக்கோஸில் உள்ளே காற்றே இருக்காது. வெலவெலன்னு லேசா இருக்கிறதில் உள்ளே காத்து இருக்கும். அதனால் எடை குறைவாகக் காண்பிக்கும்... உங்க சயன்ஸ் அறிவெல்லாம் கறிகாய் மார்க்கெட்டிற்கு உதவாது'' என்றாள்.

''உண்மைதான் கமலா'' என்றேன்.

● ● ●

''பேப்பரில் பார்த்தீங்களா... ஆறு டஜன் தையல் மிஷின் ஊசி வாங்கினால் ஒரு பிளாஸ்டிக் பக்கெட் இலவசம் தருகிறார்கள்.''

''வீட்டில் இருக்கும் பக்கெட்டுகள் எட்டுத் தலைமுறைக்கு வரும் கமலா.''

''வரட்டுமே... தையல் மிஷின் ஊசி இருக்கிறதா வீட்டில்?''

''மெஷின் இருந்தால்தானே ஊசி இருப்பதற்கு? மெஷின் வாங்கும்போது ஊசி வாங்கிக் கொண்டால் போகிறது — கமலா!''

தாளிப்பு: கடுகு

''அப்போது உங்களுக்கு வெத்தலே பாக்கு வெச்சுப் பிளாஸ்டிக் பக்கெட் இலவசமாகத் தரப் போகிறார்களா?''

''ஒசிப் பக்கெட்டுக்காக ஊசியை வாங்கி ஸ்டாக் பண்ணணுமா?''

''ஊசி என்ன ஊசிப்போற வஸ்துவா?— இருந்துவிட்டுப் போறது. எப்போ லாபமாக் கிடைக்கிறதோ அப்போ வாங்காமல் இருப்பாளா?''

''சரி... சரி.... கமலா.''

● ● ●

''கமலா... நாளைக்கு காலே பத்து மணியிலிருந்து பாம் ஆயில் தர்றாங்களாம், கடையில். நான் முதல்லே போய் நின்னுடப் போறேன்.''

''ஒண்ணும் வேண்டாம். ஒரே கூட்டமாக இருக்கும். தங்கிப் போய்டுவீங்க. இரண்டு நாள் கழிச்சுப் போகலாம்.''

''இல்லே கமலா... கூட்டமாக இருக்கும்னு ரொம்பப் பேர் இரண்டு நாள் கழிச்சுத்தான் வருவாங்க. முதல் நாள் கூட்டம் இருக்காது.''

''எல்லோரும் இரண்டு நாள் கழிச்சு வருவாங்க, நாம்ப முதல் நாளே போயிடலாம்னு எல்லாரும் நினைச்சுண்டு வந்துடுவாங்க. கொஞ்சமாவது யோசனை இருக்கணுமே!''

''வாஸ்தவம்தான் கமலா!''

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431643)
Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...






செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. C. 4. TM

REGISTERED No. M. [illegible]
Registered as a Newspaper in Sri Lanka

# இப்போது! இந்தியாவிலே!
## சிகப்பழகு தரும் உலகுபுகழ்க் கண்டுபிடிப்பு!
# கிளியர்·டோன்

சருமத் தெளிவுடன் சிகப்பழகு தரும் ஒரு சிறப்புப் பொருள் அடங்கியது.

கதிரொளி பட்டுக் கறுக்காமல் தடுக்கும் வெயிலில் மதிப்பு சாதனம் உள்ளடக்கம்.



மாசுமறு நீக்கும் விஞ்ஞான அமைப்பிலக்கணம் (ஃபார்முலா)

சரும செழிப்புக்கான ஈரவளப்பச் சத்து இதில் மிகுதி

## பரிபூரண சிகப்பழகு சாதன க்ரீம்

கனவு பலித்தது! பொன்வண்ணம் மேனிமீது பூக்க— செவ்வேலழகு செழிக்க, இதோ **கிளியர்-டோன்** — பாரெங்கும் பல கோடி அழகு மாந்தர் பல நாட்டினர் வேளாவேளை பயன்படுத்தும் சிகப்பழகு க்ரீம்.

**கிளியர்-டோன்** —பன்னாட்டுலக மருத்தாராய்ச்சிப் பயனும்—விஞ்ஞான ஆக்கமுறைச் சிகப்பழகு க்ரீம்— இதனை இப்போது உங்களிடம் கொணருவோர் நிக்கோலஸ் லெபாரட்டரீஸ் இந்தியா லிமிடெட்.

சருமத் தெளிவுடன் சிகப்பழகு மலரவைக்க கிளியர்டோன் க்ரீமில் இருப்பதென்ன— இந்தியாவில் கிடைக்கின்ற வேறெந்த க்ரீமிலும் இல்லாத ஒரு சிறப்புப் பொருள் ; பலநாட்டுலகிலும் ஏற்புப் பெற்ற ஃபார்முலா.

இயற்கையோடு இயற்கையாய்ச் செயல்படும் **கிளியர்-டோன்** அழகு 'சேப்பாக்குது' உங்கள மேனியை, நீக்குது மாசுமறுக்களை. க்ரீம் இதன் விஞ்ஞான அமைப்பிலக்கணமே.

சூரிய ஒளியிலுள்ள கேடான அல்ட்ரா — வயலெட் கதிர்களை உடம்பின் மேல் பட விடாமல் தடுத்துக் காத்திடுகிறது மேனி கறுக்கா வண்ணம். அதோடல்ல, உங்கள் சருமத்திற்குத் தேவைப்படும் மழமழ ஈரத் தன்மையை வரவழைக்கும் **கிளியர்-டோன்**. பாரீர் வண்ணமாறுதல்— வேளை தவறாமல் 6 வாரம் **கிளியர்-டோன்** உபயோகிக்கும் பலன்கள் ஒரே பார்த்துப் பூரித்தே போவீர்கள்!

பலநாட்டுலகிலும் புகழ்பெற்றது

புதிது



Clear·tone
the perfect fairness cream
Makes you fairer, keeps you fairer, naturally.
LONDON · PARIS · NEW YORK

உயரிய ஃபார்முலா, ஓங்கிய சக்தி

சிகப்பழகு ரகசியம்— இயற்கையாய் உமக்கே. **கிளியர்·டோன்**
லண்டன்·பாரிஸ்·நியூயார்க்.

daCunha/NICL/3/81-TM